# மின்னூல் வெளியீடு

மின்னூல் வெளியீட்டாளர்: http://freetamilebooks.com

அட்டைப்படம்: தனம் - dhanam.kirupa@gmail.com

மின்னூலாக்கம்: லெனின் குருசாமி - guru-leninn@gmail.com

மின்னூலாக்க செயற்திட்டம்: கணியம் அறக்கட்டளை - kaniyam.com/foundation

# Ebook Publication

Ebook Publisher: http://freetamilebooks.com

Cover Image: Dhanam - dhanam.kirupa@gmail.com

Ebook Creation: Lenin Gurusamy - guruleninn@gmail.com

Ebook Project: Kaniyam Foundation - kaniyam.com/foundation

# பொருளடக்கம்

# 1. என்னுரை

கம்பராமாயணத்தை தொடர் வாசிப்பு செய்து கொண்டிருந்தபோது பொறியில் தட்டியதுதான் சடைப்ப வள்ளல் குறித்த இந்த தனித்தப் பதிவுக்கான தேடல்.

அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சில இலக்கியச் சான்றுகள் கிடைக்கின்றன. சடையப்ப வள்ளல் வாழ்ந்த ஊர் எது என்பதிலேயே இன்றும் தமிழறிஞர்கள் மத்தியில் குழப்பம் நீடிக்கிறது.

கதிராமங்கலம் வெண்ணெய்நல்லூர், விழுப்புரம் திருவெண்ணெய்நல்லூர் ஆகிய இரண்டு ஊர்களிலும் களஆய்வு செய்தேன். சோழமண்டல சதகம், தொண்டை மண்டல சதகம், ஏர் எழுபது, கொங்குமண்டல சதகம், கம்பராமாயணப் பாடல்கள் என வாசிப்பு நீண்டது.

கிடைக்கப்பெற்ற இலக்கியச் சான்றுகள், கள ஆய்வுச் செய்திகள் அடங்கியத் தொகுப்பே இச்சிறு ஆய்வுக் கட்டுரை நூலாகும். போதுமான நிழற்படங்கள் சேர்க்கப்பட்டுள்ளன. கம்பரையும் இணைத்தே செய்திகள் பலவும் தரப்பட்டுள்ளன.

நான் தமிழறிஞனுமல்ல. வரலாற்று ஆய்வாளனும் அல்ல. ஒரு தமிழ் காத்த வள்ளலை முழுமையாக அறியவேண்டும் என்ற அவாவின் உந்துதலினால் ஏற்பட்ட விளைவே இச்சிறு நூல். முழுமையாக அறிய முடியாத அளவுக்கு என்னிடம் உள்ள பற்றாக்குறையையும் உணர்கிறேன். முதற்படி என்றளவில் மனநிறைவும் உண்டு.

ஒத்துழைப்பு நல்கிய கதிராமங்கலம் சமூக சேவகர் திரு.ஏ.ஆர். பாலு மற்றும் அவரது நண்பர்கள், திருவெண்ணெய்நல்லூர் திரு.சரவண ரெட்டியார், அழகுற அச்சுவடிவம்

கொடுத்த கடலூர் தனம் பிரிண்டர்ஸ், பதிப்பித்த காரைக்குடி உ.வே.சா. பதிப்பகத்தார் ஆகியோருக்கும் என் நன்றி. தமிழ்ச்சமூகம் இதனை ஏற்று ஆதரிக்கும் என்று நம்புகின்றேன்.

அன்பன்

கோவி. ஜெயராமன் (நூலாசிரியர்)

தலைப்பு : சடையப்ப வள்ளல், (கம்பர் காவலர்)

பொருள் : ஆய்வுக் கட்டுரை

ஆசிரியர் : கோவி. ஜெயராமன்

முதற்பதிப்பு : 2022 ஜூலை



பதிப்பாளர் : பெண்ணைப் பதிப்பகம் 12, கல்லூரி ஆசிரியர் நகர்-2, உண்ணாமலைச் சாவடி,

கோண்டூர் அஞ்சல், கடலூர் - 607 006. (() : 94427 46411

அச்சிட்டோர் : சன் கிரியேசன்ஸ், காரைக்குடி - 630 003, அலைபேசி : 9578078500

# 2. கம்பர்

சோழ நாட்டில், சிதம்பரம் - மயிலாடுதுறை சாலையில் குத்தாலம் அருகில் உள்ள திருவழுந்தூர் என்னும் ஊரில் கம்பர் பிறந்தார். ஆதித்தன் என்பது அவரது தந்தையார் பெயர். "ஆதவன் புதல்வன் முத்தி யறிவினை யளிக்கு மண்ணணல், போதவ னிராமகாதை புகன்றருள் புனிதன் மண்மேற், மாதவன் கம்பன் செம்பொன் மலரடி தொழுது வாழ்வாம்" என்ற பாடல் அவரது தந்தையின் பெயர் ஆதித்தன் என்பதற்கானச் சான்றாக விளங்குகிறது.

கம்பர் இளமையிலேயே தந்தையை இழந்தார். திருவெண்ணெய் நல்லூர் சடையப்ப வள்ளலிடம் சென்று அடைக்கலம் ஆனார். வறுமையைத் தீர்த்தும், கல்வியளித்தும் கம்பன்

தலையக் கருணை செய்தவர் சடையப்பர். சடையப்பர் மாளிகையில் தங்கிக்கொண்டு பெரும்பகுதி இராமாயணத்தை எழுதி முடித்தார். தமிழ் உலகம் கொண்டாடும் ஒரு பெரும் புலவரை தமிழ்மண்ணுக்கு அளித்தப் பெருமை சடையப்ப வள்ளலையேச் சாரும். அதே போல் பெருங்காப்பியம் இராமாயணம் தமிழருக்குக் கிடைத்திட அவரே தூண்டுகோலாகவும், ஊன்றுகோலாகவும் இருந்துள்ளார்.

கம்பரின் காலம் ஒன்பதாம் நூற்றாண்டு என்று ஒருசாராரும், பன்னிரண்டாம் நூற்றாண்டு என்று மற்றொரு சாராரும் ஆக இலக்கிய உலகம் இன்றும் விவாதித்துக் கொண்டிருக்கிறது. கம்பர் அடிப்பொடி பெரியவர் சா.கணேசன் அவர்கள்

”எண்ணிய சகாத்த மெண்ணூற் றேழின் மேற் சடையன் வாழ்வு

நண்ணிய வெண்ணெய் நல்லூர்

தன்னிலே கம்ப நாடன்

பண்ணிய விராமகாதை பங்குனி யுத்தரத்திற்

கண்ணிய வரங்கர் முன்னே கவிரங்கேற்றினானே”

என்ற தொண்டை மண்டல சதகம் பாடலை ஆதாரமாகக் கொண்டு “எண்ணூற்றேழின் மேற் சடையன் வாழ்வு” என்பதில் சாலிவாகன சகாப்தம் 807 என்பது கி.பி. 885 ஆவது வருடம் ஆதலால் கம்பர் காலம் ஒன்பதாம் நூற்றாண்டே என்று உறுதிக்கொண்டு நிகழ்வுகளுக்கான அழைப்பிதழ்களில் அவ்வாறே அச்சிட்டும் வந்தார். பங்குனி யத்த நாளில் என்ற பாடபேதமும் உண்டு. பங்குனி உத்தர நட்சத்திரத்தில் இராமரின் திருமணம் நடைபெற்றது. அந்நாளே பொருத்தமாக உள்ளது. அந்நாளில்தான் கம்பராமாயணம் அரங்கேற்றப்பட்டது. பங்குனி அஸ்தம் நட்சத்திரம் நாளில் என்பது பாடபேதம்

என்பார்.

கம்பரின் சமகாலத்தவர் ஒட்டக்கூத்தர். இரண்டாம் குலோத்துங்க சோழனையும் அவனது மகன் இராசராசனையும் ஒட்டக்கூத்தர் தம் உலா நூலில் பாடியுள்ளதால் கம்பர் காலம் பன்னிரண்டாம் நூற்றாண்டே என்றக் கணிப்பும் உண்டு.

# 3. கம்பர் - களஆய்வு

8.05.2022 அன்று புதன்கிழமை. மயிலாடுதுறை சாலையில் குத்தாலம் அருகில் உள்ள தேரழுந்தூர் என்ற ஊரைச் சேர்ந்தேன்.

கம்பராமாயணம் இயற்றிய கவிச்சக்கரவர்த்தி கம்பர் பிறந்த ஊர் இது. அழுந்தூர், திருவழுந்தூர், தேரழுந்தூர் என்று பலவாறாய் அழைக்கப்படும் ஊர் இது. கடைத்தெரு அங்காடிப் பெயர் பலகைகளில் தேரிழந்தூர் என்றே டிஜிட்டலில் அச்சிட்டு வைக்கப்பட்டுள்ளன. தேரழந்தூர், தேரிழந்தூர் இரண்டுக்கும் வேறுபாடு அறியாமல் தமிழ்மக்கள் இருப்பது வருத்தமாகத்தான் உள்ளது.

ஆமருவியப்பன் பெருமாள் கோவிலுள் நுழைந்ததும் முகப்புப் பிரதானச் சுவற்றில் கம்பர் சன்னதி உள்ளது. கம்பரும் அ வ ர

து துணைவியாரும் சுவற்றில் பிம்பமாகப் பதிக்கப்பட்ட பழைய சன்னதியும், அதன் பக்கத்தில் அதே அளவு இருவரின் முழுஉருவப் பிம்பங்களும் வைக்கப்பட்டுள்ள புதிய சன்னதியும் அடுத்தடுத்து உள்ளன.

பெருமாள் கோயில் அர்ச்சகர் ஆமருவியப்பனின் நின்ற கோலம் முழுவதையும் எமக்கு விளக்கினார். ஒரு பாதம் அழுந்தியும் மறுபாதம் நிலத்தைத் தொடாமலும் இருக்கும் பெருமாளின் பாத தரிசனத்தைக் காட்டி விளக்கமும் அளித்தார். தேரை அழுத்தி நின்ற கோலம் அது. தேரழுந்தியதால் தேரழுந்தூர் என்று பெயராயிற்று என்பது புராண வரலாறு.

**கம்பர்மேடு :**

ஆமருவியப்பன் கோவிலுக்குச் சற்றுத் தொலைவில் மேலையூர் என்ற பகுதியில்

கம்பர்மேடு உள்ளது. கம்பர் இங்கேதான் பிறந்து வாழ்ந்தார் என்பது வரலாறு.

விரிந்து பரந்த பூமி இது. சுற்றிலும் தாழ்ந்தும் இப்பகுதி மட்டும் மேடாகவும் உள்ளது. தொல்லியல் துறை சுற்றுப்புற நடத்தியக் குறிப்பும் பெயர் பலகையாய் வைக்கப்பட்டுள்ளது.

கம்பர்மேடு - Kambarmedu என்று தமிழிலும் ஆங்கிலத்திலும் சிமெண்ட் பலகை வைக்கப்பட்டுள்ளது. தொல்லியல்துறை அகழாய்வில் கிடைத்தப் பொருட்களைக் கொண்டு அவற்றின் காலத்தை இரும்புக்காலம் என்று கணித்துள்ளனர்.

**காளி வழிபாடு :**

கம்பர் வைணவர் என்றும், சைவர் என்றும் இன்றும் விவாதிக்கப்பட்டு வருகின்றது. ஆனால், அவர் உவச்சக் குலத்தில் பிறந்தவர். உவச்சர்

என்றால் கிராமக் கோயில் பூசாரி என்பதாகும். கம்பர் இராமாயணம் பாடவும், அதனை அவர் மாணாக்கர் எழுதிடவும், ஒற்றியூர்க் காளி இரவில் தீப்பந்தம் பிடித்து வெளிச்சம் கொடுத்தாள் எனவும் தமிழ் நாவலர் சரிதை கூறுகின்றது. காளிதாசனைப் போல, பாரதியைப் போலக் கம்பனும் சக்தி உபாசகன் என்பதில் ஐயமில்லை .

கம்பர்மேடு மேலையூர் எல்லையில் ஸ்ரீ மஹா காளியம்மன் கோயில் ஒன்று சிறிய அளவில் உள்ளது. பிற்காலத்தில் கட்டப்பட்ட சிமெண்ட் காரைக் கோயில் இது. கம்பர் காலத்தில் எல்லையின் வனப்பகுதியில் விக்கிரகமாக வைக்கப்பட்டு வழிபாட்டில் இருந்திருக்கலாம்.

கம்பர் பூசித்து வந்த காளி இது என்று மக்கள் அடையாளம் காட்டினர்.

அதே மேலையூர் மாரியம்மன் கோயில்

வளாகத்தில் தனிச்சன்னதியாக கம்பர் விநாயகர் சன்னதி உள்ளது. கம்பர் வழிபட்ட விநாயகர் என்பதால் கம்பர் விநாயகர் என்றே அழைக்கப்படுகிறார். சன்னதி முகப்பில் கம்பர் விநாயகர் என்றே பெயர் பொறிக்கப்பட்டுள்ளது.

தேரழுந்தூரில் இருந்து சென்ற வழியே திரும்பி வந்தால் முதன்மைச் சாலையில் ஷேத்திரபாலபுரம் ஊர் உள்ளது. முற்காலத்தில் இது வயிரவபுரம் என்று அழைக்கப்பட்டுள்ளது.

ஷேத்திரபாலர் என்பது வயிரவர் என்பதாகும்.

முதன்மைச்சாலை ஓரத்தில் ஒரு அரசமரத்தடியில் ஸ்ரீசெல்லியம்மன் ஆலயம் என்று சிறிய அளவில் உள்ளது. இதுவும் பிற்காலத்தில் கட்டப்பட்ட சிமெண்ட் காரைக்கோயிலாகும்.

கம்பர் வழிபட்ட இந்த அம்மனின் பெயர் மாகாளி அங்காளியம்மன் ஆகும். காலப்போக்கில்

செல்லியம்மன் என்ற பெயரில் மக்கள் வழிபடுகின்றனர். புதர்களை விலக்கிப் பார்த்தோம். வெளிச் சுவற்றில் கம்பர் உருவம் வரையப்பட்டுள்ளது.

“கம்பருக்கு கவிதை வரம் தந்த மாகாளி என்கிற அங்காளியம்மன் கோயில்” என்று வண்ணக் கலவையால் எழுதி வைக்கப்பட்டுள்ளதைக் காணமுடிந்தது.

கம்பர் முதன்முதல் இந்த அம்மனின் பெயரில் பாடியப் பாடல் “வாய்த்த வயிரபுர மாகாளியம்மே கேள்” என்பதாகும் என்று தமிழறிஞர் உ.வே.சா குறிப்பிடுகிறார்.

ஷேத்திரபாலபுரத்திலிருந்து கதிராமங்கலம் அடைந்தேன். கதிரா மங்கலத்திலும் கம்பர் வழிபட்ட காளிக்கோயில் உள்ளது. இந்த அம்மனை வயிரக்காளி என்று மக்கள் அழைக்கின்றனர்.

இந்தக் காளி முன் அமர்ந்தும் கம்பர் பாடல்களைப் பாடினார் என்று வழிவழிச் செய்தியாக மக்களிடம் உள்ளது.

# 4. கம்பராமாயணம்

கம்பரின் மகன் அம்பிகாபதியும் ஒரு சிறந்த தமிழ்ப் புலவர். அம்பிகாபதியின் திருமணத்திற்கு சடையப்பர், சிறிது கால தாமதமாக வந்ததால் தக்க இருக்கையில் அவர் அமர முடியவில்லை . ஜலதரை ஓரம் ஒதுங்கி நிற்கவேண்டிய சூழல் ஏற்பட்டுவிட்டது. அது கண்ட கம்பரின் மனைவியார் மிக்க வருத்தம் அடைந்தார். தன் சகோதரனிடத்தில் இருந்து சீர் செய்யும் தகுதி பெற்றவர் இப்படி நிற்பது கண்டு தனது கணவரிடம் புலம்பினார். வருந்த வேண்டாம். இதனினும் மேலான இருக்கையில் யாம் அவரை அமர வைப்போம் என்றார் கம்பர்.

முதனூல் வான்மீகி இராமாயணத்தைத் தழுவி, தமிழ் முறைமைக்கும், பண்பாட்டிற்கும் பங்கம்

ஏற்படாத வகையிலும், அதேபோழ்து முதனூலோடு மிக்க முரண்பாடுகள் கொள்ளாமலும், தமிழ் மொழியில் இராமகாதையைக் கம்பர் இயற்றினார்.

இராமாவதாரம் என்பதே கம்பர் தம் நூலுக்கு இட்டப்பெயர். பின்னாளில் காவியச் சிறப்பைத் துய்த்தச் சான்றோர், நூலாசிரியரைச் சிறப்பிக்கும் முகத்தான் கம்பராமாயணம் என்றே பரப்பினர். இப்பெயரே நிலைத்தும் போனது.

கம்பர் பாலகாண்டம் முதலாக யுத்தகாண்டம் ஈறாக ஆறு காண்டங்களையே பாடினார் என்பதும், ஏழாவது காண்டமாகிய உத்தரக்காண்டத்தை புலவர் ஒட்டக்கூத்தர் பாடினார் என்பதுவும் வழக்காகி விளங்குகின்றது.

கம்பர் இந்நூலின் பெரும்பகுதியை திருவெண்ணெய் நல்லூரிலும், சிறு பகுதியை திருவொற்றியூரிலும் பாடினார் என்பதுவும்

சான்றோர் உறுதிப்பாடு.

கம்பர் தன்னுடைய இராமாயண அரங்கேற்றத்திற்கு அஞ்சனாட்சி என்கிற தேவதாசியிடம் இருந்து சாற்றுக்கவி பெற்றுள்ளார் என்ற செய்தி, புலமையாளர்கள் இன்னார் என்று பேதம் பாராமல் தமிழ்ப் புலமைக்கு கம்பர் கொடுத்த மரியாதை மேலோங்குகிறது.

கம்பராமாயணம் எழுதும் போது நூற்றுக்கு ஒரு பாடலில் சடையப்பரைப் புகழ்ந்து வைத்தார். கம்பர் இந்நூலை அரச சபையில் பாடி அரங்கேற்றிட விரும்பவில்லை. ஆதலால் திருவரங்கத்தில் வைணவப் பெரியோர் கூடிய சபையில் அரங்கேற்றினார்.

# 5. கம்பராமாயணத்தில் சடையப்பர்

ஆனால் அரங்கேற்றத்தில் வைணவ பெரியோர்கள் திருமாலைப் பாடும் காவியத்தில் மானுடனைப் புகழ்தல் சரியல்ல என்று எதிர்த்தனர். இறுதியில் சமரசம் ஏற்பட்டு ஆயிரம் பாடலுக்கு ஒன்று என வைத்துக்கொள்ளலாம் என்று இசைந்தனர். கம்பரும், ஆம்... சடையப்பர் ஆயிரத்தில் ஒருவர் தான் என்று பெருமையாக ஏற்றுக்கொண்டார். அதன்படி பத்து பாடல்களில் கம்பரின் பெருமையை புகழ்ந்து பாடி தன்னை ஆளாக்கிய வள்ளலுக்கு நன்றிக்கடன் செலுத்தினார் கம்பர் என்ற வழி வழிக் கதை நிலைக்கிறது.

இப்பாடல்கள் கம்பரின் கூற்றானப்படியால் இவை நேரில் கண்ட சாட்சியாக அமைகின்றன. இப்பத்து பாடல்களுள் யுத்தகாண்டம், திருமுடிசூட்டு படலத்தில் “அந்தணர் வணிகர்” எனத் தொடங்கும் பாடல் கிடைக்கப்பெறவில்லை. பாலகாண்டம், அகலிகை படலத்தில் “அரமடந்தையர்…” எனத்தொடங்கும் பாடலிலும், யுத்தகாண்டம், மருத்துமலை படலத்தில் “வன்னி நாட்டிய பொன்மௌலி…” எனத்தொடங்கும் பாடலிலும் நேரடியாக இல்லாமல் இலைமறைகாய் போல சடையப்பர் புகழப்படுகின்றார் என்பதனை உரையாசிரியர்களும், வைணவப் பெரியோர்களும், பௌராணியர்களும் முன் வைக்கின்றனர். ஏனைய ஏழு பாடல்களில் சடையப்ப வள்ளலின் பெயரிட்டுப் பாடப்பட்டுள்ளது.

அப்பாடல்கள் வருமாறு:

உரையாசிரியர் வை.மு.கோபாலகிருஷ்ண மாச்சாரியார் கையாண்ட பாடல் வரிசை எண்கள் இங்கு எடுத்தாளப்படுகின்றது.

1. நடையில் நின்றுயர் நாயகன் தோற்றத்தின்
இடை நிகழ்ந்த இராமாவதாரப் பேர்த்
தொடை நிரம்பிய தோமறு மாக்கதை
சடையன் வெண்ணெய் நல்லூர்வயின் தந்ததே.

- பாலகாண்டம், தற்சிறப்புப் பாயிரம்-11

திருமாலின் இராமாவதாரத் தோற்றத்தைச் சிறப்பித்துப் புகழ்ந்து பாடும் இக்கதை சடையப்ப வள்ளல் வாழ்ந்த திருவெண்ணெய் நல்லூரில் செய்யப்பட்டது. கம்பராமாயணம் இயற்றப்பட்ட இடம் இங்கே தெளிவாகக் கூறப்பட்டுள்ளது.

“சடையன் வெண்ணெய் நல்லூர்” என்றது சடையன் ஊர், சடையனே ஊர் என்றவாறு சடையப்பர் செல்வாக்குப் பெற்ற முதனிலையாளர் என்பது விளங்குகின்றது.

2. விண்ணவர் போய பின்றை விரிந்த பூ மழையினாலே
தண்ணெனுங் கான நீங்கித் தாங்கருந் தவத்தின் மிக்கோன்
மண்ணவர் வறுமை நோய்க்கு மருந்தன சடையன் வெண்ணெய்
அண்ணறன் சொல்லே யன்ன படைக்கலம் அருளினானே.

- பாலகாண்டம், வேள்விப்படலம்-1

இராமலட்சுமணர் உதவிக்கொண்டு தாடகையை வதம் செய்த பின்னர் விசுவாமித்திரர் வேள்வியைத் தொடங்கிட முடிவு செய்தார். இராமனிடத்தில் தன்னிடம் உள்ள படைக்

கலன்களைத் தந்து அவற்றின் பெருமையை விளக்குகிறார்.

மருந்தைக் கண்டால் நோய் மறைந்து நில்லாமல் விலகிப் போவது போல வெண்ணெய் நல்லூர் சடையனைக் கண்டால் மண்மக்களின் வறுமை மறைந்து நில்லாமல் போகும். சடையப்பர் சொல் தவறாதவர். அதுபோலவே தனது அஸ்திரங்கள் குறி தவறாதவை என்றபடி மாதவத்தான் விசுவாமித்திரன் வாயால் சடையப்பரின் பெருமையைப் பேச வைக்கின்றார் கம்பர். 4. வண்ண மாலைக் கைபரப்பி யுலகை வளைந்த இருளெல்லாம்

“மருந்தன சடையன்” “அண்ணல்தன் சொல்லே யன்னப் படைக்கலம்” என்ற இச்சொற்றொடர்கள் முனிவரின் வாயினின்று வந்தது சடையப்பருக்கானப் பெருமையே.

3. அரமடந்தையர் கற்பக நவநிதி யமிர்தச்

சுரபி வாம்பரி மதமலை முதலிய தொடக்கற்று

ஒரு பெரும் பொருள் இன்றியே யுள்ளன வெல்லாம்

வெருவி யோடிப் புக்கொளித்தன விரிதிரைக் கடலின்.

- பாலகாண்டம், அகலிகைப் படலம் -18

திருமகள் சூடியிருந்த ஒரு நறுமணப் பூமாலையை வித்தியாதரப் பெண் ஒருவள் பெற்றாள். அவளிடமிருந்து துருவாச முனிவர் தனது மாதவத்தால் பெற்றார். அம்மாலையை இது உனக்கே தக்கது என்று முனிவர் தேவேந்திரனிடம் தந்தார். தனது செல்வச்செருக்கினால் அலட்சியம் செய்து அம்மாலையை தேவேந்திரன் யானை ஒன்றின் துதிக்கையில் வீசினான். உமது

செல்வங்கள் யாவும் பாற்கடலில் போய் மறையும். நீ வறுமையில் துன்பம் அடைவாய் என்று துருவாசர் தேவேந்திரனுக்குச் சாபம் தந்தார். அவ்வாறே அரமடந்தையர், கற்பகத்தரு, நவநிதி, அமிர்தசுரபி (காமதேனு), வாம்பரி (வெள்ளைக் குதிரை), மதமலை (ஐராவதம் யானை) என யாவும் மறைந்து போயின. தேவர்கள் வறுமைத் துரத்த அவற்றின் பின்னே ஓடினர் என்பதாம்.

ஓடினர் விண்ணவர்கண்ணன் மேவாரின்

ஓடினர் விண்ணவர் வெண்ணெய் மேவாரின்

ஓடின வெண்ணெய் வாழ் கண்ணன் மேவாரின்

ஓடின கண்ணன் வாழ் வெண்ணெய் மேவாரின்

என்ற பாடங்கள் கம்பரின் நன்றிப் பெருக்கைப் புலப்படுத்தும். இங்கே கண்ணன்

என்றது சடையப்ப வள்ளலார். பாற்கடலில் திருமாலிடம் செல்வம் குவிந்துள்ளது போன்று சடையப்ப வள்ளலிடமும் அவை நிறைந்துள்ளன என்பதாலேயே, சாபத்தால் ஏற்பட்ட வறுமையால் விண்ணவர் சடையப்பரிடம் ஓடினர் என்பதாம்.

உண்ண வெண்ணித் தண்மதியத்து உதயத்து எழுந்த நிலாக்கற்றை

விண்ணும் மண்ணும் திசையனைத்தும் விழுங்கிக் கொண்ட விரிநன்னீர்ப்

பண்ணை வெண்ணெய்ச் சடையன் தன் புகழ் போல் எங்கும் பரந்துளதால்.

- பாலகாண்டம், மிதிலைக் காட்சிப்படலம் -73

உலகத்தைச் சூழ்ந்துள்ள இருள் முழுவதையும் நிலாவின் கற்றையானது விழுங்கி, மண்ணும் விண்ணும் பரவி ஒளி வீசுவதுபோல நல்ல நீர்வளம் பெருகிய கழனிகளையுடைய திருவெண்ணெய்

நல்லூர் சடையப்ப வள்ளலின் புகழ் எங்கும் பரந்துள்ளது. இருள் முழுவதையும் நிலா விழுங்கியது போல, வறுமை முழுவதையும் விழுங்கி இரவலர்க்குக் கொடையளித்தான் என்பது மறைபொருள். பண்ணை வெண்ணெய்ச் சடையன் என்றதால் பெரும் கழனி நிலப்பரப்பை உடைய வேளாண் செல்வந்தன் என்றாயிற்று.

5. மஞ்சினில் திகழ்தரும் மலையை மாக்குரங்கு
எஞ்சுறக் கடிதெடுத்து எறியவே நளன்
விஞ்சையில் தாங்கினான் சடையன் வெண்ணையில்
தஞ்சம் என்றோர்களைத் தாங்கும் தன்மை போல்.

- யுத்தகாண்டம், சேதுபந்தனப் படலம்-9.

அனுமன் வழியாக சீதாப் பிராட்டி இலங்கை

மீட்கும் பொருட்டு வானரங்கள் சேது பந்தனம் கட்டின. அச்சமயம் பெரும் குரங்குகள் மலைகளைத் தூக்கி வீசின. அவற்றை நளன் என்கிற வானரன் தாங்கிப் பிடித்து சேது கட்டினான். தாங்கிப் பிடித்து அடுக்குதல் என்பது தொழில் வல்லமைதான். எவ்வளவு உயரத்தில் இருந்தாலும் சித்தாள்கள் வீசும் செங்கற்களைத் தாங்கி கொத்தனார்கள் சுவரில் அடுக்குவது இன்றும் நாம் காணும் காட்சிகள்.

நளன் மலைகளைத் தாங்கியது என்பது “நீயே தஞ்சம்” என்று வந்தவர்களை வெண்ணெய் நல்லூர் சடையன் தாங்கும் தன்மை போல இருந்தது எனக் கம்பர் பாடுகிறார். மலைபோன்ற வேதனையில் வந்தாரையும் தாங்கும் ஈர இருதயம் படைத்தவன் சடையன் என்றுணர்க.

6. வாசங் கலந்த மரைநாள
நூலின் வகையென்ப தென்னை மழை யென்று

ஆசங்கை கொண்ட கொடைமீளி யண்ணல் சடையன்றன் வெண்ணெ யணுகும்

தேசங் கலந்த மறைவாணர் செஞ்சொல் அறிவாளர் என்றிம் முதலோர்

பாசங்கலந்த பசிபோல் அகன்ற பதகன் துரந்த வுரகம்.

- யுத்த காண்டம், நாகபாசப்படலம் -263

யுத்தத்தில் இந்திரஜித் நாகபாசத்தைப் பயன்படுத்தினான். இந்திரஜித்தின் தவ வலிமைக் கண்டு இரங்கிய சிவன் தந்த ஆயுதம் அது. இது எதிரிகளை இறுகக் கட்டிப்பிடித்து வலுவிழக்கச் செய்யும் தன்மையது. இலக்குமணன் உட்பட வீரர் யாவரையும் இறுகப்பற்றி மூர்ச்சையடையச் செய்து விட்டது. நாகபாசத்தால் தம்பி இறப்பின் தானும் இறப்பேன் என்று இராமன் கலங்கியத் தருணம் அது. அச்சமயம் கருடன் யுத்தகளத்தின் மேலே பறந்துவந்தான். அவன் நிழல் பட்டதும்

நாகபாசம் நீங்கிப் போனது. இலக்குமணன் உள்ளிட்ட யாவரும் மூர்ச்சைத் தெளிந்தனர்.

வேதம் வல்ல வடமொழி அந்தணர்களும், செம்மொழி தமிழ்ப் புலவர்களும் இவர்களின் சுற்றத்தார்களும் பசியால் வருந்தி சடையப்பருடன் வந்தவுடனேயே அப்பசி ஒழிந்துவிட்டதாம்.

அதுபோலவே இந்திரஜித்தின் நாகபாசம் கருடன் நிழல் பட்டவுடன் மறைந்து போனது. கனல் போரைக் காட்சிப்படுத்துகின்ற போழ்தும் தனது வள்ளலை நினைவுப்படுத்தும் சொல் தேடுகிறார் கம்பர்.

7. வன்னி நாட்டிய பொன்மௌலி வானவன் மலரின் மேலான்

கன்னிநாள் திருவைச் சேர்ந்த கண்ணனும் ஆளுங் காணிச்

சென்னி நாட்டு எரியல் வீரன் தியாகமா வினோதன் தெய்வப்

பொன்னி நாட்டுவமை வைப்பைப்புலன்கொள நோக்கிப் போனான்.

- யுத்தகாண்டம், மருத்துமலைப்படலம்-58

போரில் இந்திரஜித் ஏவிய பிரமாத்திரத்தினால் இலட்சுமணரும் வானரர்களும் உயிரொடுங்கிய நிலையை அடைந்தனர். சாம்பவான் அறிவுரைப்படி உயிர்ப்பிக்கும் மூலிகைகளைக் கொணர அனுமன் சஞ்சீவி மலையை நோக்கிப் பயணமானான். மேரு மலையைக் கடந்து உத்தரகுரு என்னும் நாட்டை அடைந்தான்.

அந்நாடு போகபூமி போல் அனுமன் கண்ணுக்குப் புலப்பட்டது. கம்பர் தனது நாட்டுப்பற்று மிகுதியால் அப்பூமி சடையப்ப வள்ளல் வாழும் பொன்னிநாடு போல் செழித்திருந்தது. அதனை அனுமன் கண்டு களித்துச் சென்றான் என்கிறார். “கண்ணணும்

ஆளும் காணி” என்பதற்கு வைணவப் பெரியோர்கள், உரையாளர்கள் சடையப்பர் பூமி என்றே பொருள் வைக்கின்றனர். கண்ணன் என்பது சடையப்பரின் இன்னொரு பெயர் என்பார். கம்பர் தனது வள்ளல் சடையப்பரை மேன்மைப்படுத்தியது உறைபொருளாக உள்ளது என்பார். வினோதன் என்பது அனுமனின் இன்னொரு பெயர்.

8. யுத்தகாண்டத்தில் திருமுடி சூட்டு படலத்தில் சடையப்பர் புகழைப் பாடும் “அந்தணர் வணிகர்” எனத்தொடங்கும் பாடலைக் காண முடியவில்லை. தொடராய்வில் கிடைக்கும் என்ற நம்பிக்கை உள்ளது.

9. அரியணை யனுமன் தாங்க அங்கதன் உடைவாள் பற்றப்

பரதன் வெண்குடை கவிக்க இருவரும் கவரி வீச

விரைசெறி கமலத்தாள்சேர் வெண்ணெய்மன் சடையன் தங்கள்

மரபுளோர் கொடுக்க வாங்கி வசிட்டனே புனைந்தான் மௌலி

- யுத்தகாண்டம், திருமுடிசூட்டு படலம் -38

இராவணாதியர்களை அழித்து, சீதையைச்சிறைமீட்டு வந்த இராமனுக்கு அயோத்தியில் முடிசூட்டு விழா நடைபெற்றது. அனுமன் சிங்காசனத்தை தாங்கிப்பிடிக்கிறான். வாலியின் மகன் அங்கதன் உடைவாளை கையிலேந்தி நிற்கின்றான். அதுவரை வெண்கொற்றைக் குடையின் கீழ் ஆட்சிசெய்து வந்த பரதன் இப்பொழுது இராமனுக்காக அதைப் பிடித்து நிற்கிறான். மற்ற தம்பியர் இலட்சுமணரும் சத்துருக்கணணும் வெண்சாமரை வீசுகின்றனர். இலக்குமி வசிக்கும் திருவெண்ணெய் நல்லூரின்

மன்னன் சடையப்ப வள்ளலின் மரபில் தோன்றிய முன்னோர்கள் மகுடத்தை ஏந்திவந்து வசிட்டரிடம் கொடுக்கின்றனர். வசிட்ட முனிவன் இராமனுக்கு அந்த மகுடத்தைச் சூட்டினான் என்கிறார் கம்பர்.

இராமன் சக்கரவர்த்தியாகப் பட்டம் சூடும் நிகழ்வில் தன் வள்ளல் சடையப்பரையும் ஒரு மன்னனாகக் காட்டுகிறார் கம்பர். சூரிய குல சோழ அரசர்களுக்கு பட்டாபிஷேக சமயத்தில் வேளாண் மரபினர் மகுடம் கொணர்ந்து தருதல் தமிழ்நாட்டு வழக்கு. அவ்வழக்கு மாறாமல் சூரிய குலத்தவரான இராமனுக்கு தமிழ் வேளாண் மரபினர் சடையப்பரின் முன்னோர்கள் மகுடம் கொணர்ந்து கொடுத்தனர் என்பது தனது வள்ளல் சடையப்பரைப் பெருமையின் உச்சிக்கு கொண்டுபோய் சேர்த்த கம்பரின் செய்ந்நன்றி அப்பழுக்கற்றது.

இன்னொன்றையும் உய்த்துணரலாம். தசரதன் சூரியகுலம். சனகர் சந்திர குலம். சந்திரகுலத்துள் நிலமகளாய் உதித்த சீதாப்பிராட்டி சூரியகுல இராமனை விவாகம் செய்துகொண்டாள். தன் மருமகனின் பட்டாபிஷேகத்திற்கு சனகர் வந்ததாய் இல்லை . மருமகனுக்கு மாமனார் மகுடம் சூட்டுதல் ஏற்றுக்கொள்ளும் வழக்கு நியதி. சனகர் வழிநின்று பெண்வீட்டார் சார்பில் சந்திரகுலத்து வேளாண் சடையப்பர் முன்னோர் சூரியகுலத்தரசனுக்கு மகுடம் வழங்கினர் என்க. வடநாட்டையும் தென்னாட்டையும் இணைத்திட்ட கம்பர் மரபின் வழியாகவும் நின்றுள்ளார்.

10. மறையவர் வாழி வேதமனுநெறி வாழி நன்னூல்

முறைசெயு மரசர் திங்கண் மும்மழைவாழி மெய்ம்மை

இறையவன் இராமன் வாழி இக்கதை கேட்போர் வாழி

அறைபுகழ்ச் சடையன் வாழி யரும்புகழ் அனுமன் வாழி.

- யுத்தகாண்டம், திருமுடிசூட்டுபடலம் 42-ன்கீழ்.

இவ்வாழிச்செய்யுளில் தான் இயற்றியக் கதையின் மெய்க் கீர்த்திகளாய் விளங்கிய இராமன், அனுமன் இவ்விருவருடன் தன்னுடைய வள்ளல் சடையப்பரையும் இணைத்து வாழ்த்தியது என்பது தன் நெஞ்சில் நீங்காத இடத்தைச் சடையப்பருக்கு கம்பர் கொடுத்துள்ளார் என்பது தெளிவு.

தன் கம்பராமாயணம் படைப்பில் முத்தாய்ப்பாக பத்துப் பாடல்களில் சடையப்பரைக் கம்பர் போற்றியுள்ளார்.

1. இராமாயணம் எழுதப்பட்ட இடம் திருவெண்ணெய் நல்லூர் சடையப்பர் பூமி.

2. நோய்க்கு மருந்து போன்றவர் சடையப்பர். சொல் தவறாதவர்.

3. இரவலருக்கு ஈந்துவக்கும் கொடையாளர். செல்வம் குவியப் பெற்றவர்.

4. பண்ணை வெண்ணெய்ச் சடையன். நீர்வளம் பெருகிய கழனிகளுக்குச் சொந்தமான வேளாண். தஞ்சமடைந்தவர்களைத் தாங்கிக் கொள்ளும் பண்பினர்.

5. வடமொழி அறிஞர்கள், தமிழ்ப் புலவர்கள் இருசாராரும் சடையப்பரால் ஆதரிக்கப்பட்டுள்ளனர்.

6. சடையப்பரின் நிலவளம், அனுமனேக் கண்டு களித்த மேன்மை.

7. சடையப்பர் ஒரு வேளாண் வணிகரும் ஆவார்.

8. மன்னர் சடையப்பரின் முன்னோர் இராமனின்

முடிசூட்டுதலுக்கு மகுடம் கொடுத்துள்ளனர்.

9. இராமன், அனுமன் இவ்விருவருடன் சடையப்பரையும் இணைத்து மூவராக வாழ்த்தியது.

காலம் முழுவதும் தன்னை ஆதரித்துச் சீராட்டிய சடையப்ப வள்ளல் தனது இறுதிக்காலத்திலும் தன்னை அரவணைத்ததைக் கம்பர் ஒரு வெண்பாவாகப் பாடியுள்ளார்.

ஆன்பாலும் தேனும் அரம்பை முதல் முக்கனியும்
தேன்பாய உண்டு தெவிட்டு மனம் - தீம்பாய்
மறக்குமோ வெண்ணை வருசடையா கம்பன்
இறக்கும் போதேனும் இனி

# 6. சோழமண்டல சதகம் - சடையப்பர்

சோழமண்டல சதகம், தொண்டை மண்டல சதகம், ஏர் எழுபது, தமிழ் நாவலர் சரிதை ஆகிய நூல்களிலும் கம்பரின் சில தனிப்பாடல்களிலும் மற்றும் வேறு சில நூல்களிலும் சடையப்ப வள்ளலைப் பற்றியக் குறைவானச் செய்திகளே காணப்படுகின்றன. சோழமண்டல சதகம் 1723 ஆம் ஆண்டு வேளூர் ஆத்மதேசிகரால் (1650-1728) இயற்றப்பட்டது.

விருந்து நுகர்வோர் கை கழுவ
விளங்கும் புனற்கா விரிஎன்றால்
தரும்தாய் அனைய புகழ்ப் புதுவைச்

சடையன்
கொடைஆர்சாற்றவல்லார்

பரிந்தார் எவர்க்கும் எப்போதும்
பாலும் சோறும் பசிதீர
வருந்தாது அளிக்க வல்லதன்றோ
வளம்சேர் சோழ மண்டலமே

- சோழமண்ட ல சதகம்-46

இரவலர்களுக்கும், விருந்தினர்களுக்கும் பாலும் சோறும் பசிதீர அளித்தவர் சடையப்பர். விருந்துண்டு காவிரியில் கை கழுவியதால் காவிரி எச்சில் நீரானது என்பார் கவிஞர். கம்பரின் தனிப்பாடல் ஒன்றும் இவ்வாறே விளக்குகிறது.

மெய்கழுவி வந்து விருந்துண்டு மீளுமவர் கைகழுவ நீர் மோதும் காவிரியே - பொய் கழுவும் போர்வேல் சடையன் புதுவையான் இல்லறத்தை யார்போற்ற வல்லார் அறிந்து.

கம்பர் வாயால் போர்வேல் சடையன் எனக் குறிப்பிடப்பட்டுள்ளதால் சடையப்பர் போரினையும் சந்தித்துள்ளார் என்பதாகும். இப்பாடல் மூவலூரில் கல்வெட்டாக செய்யப்பட்டுள்ளது.

எட்டுத்திசையும் பரந்து நிலா
எறிக்கும் கீர்த்தி ஏருழவர்
சட்டப் படும் சீர் வெண்ணெய் நல்லூர்ச்
சடையன் கெடிலன் சரிதமெலாம்
ஒட்டிப் புகழ ஆயிரநா
உடையாற்கு அன்றி ஒருநாவின்
மட்டுப்படுமோ அவன்காணி
வளம்சேர் சோழ மண்டலமே

- சோழமண்ட ல சதகம்-72

புவியெங்கும் நிலவொளி பரந்து ஒளி

வீசுவது போல உழவர் புகழ் எங்கும் பரவியுள்ளது. அப்படியான ஏருழவர் சடையப்பர் புகழை ஆயிரம் நாவாலும் உரைக்க முடியாது என்கிறது மேற்பாடல். கெடிலன் என்ற சொல் ஆராயப்படவேண்டியது. கெடில நதிக்கரைக்கும் சொந்தமானவன் என்றும் பொருள் கொள்ளலாம்.

ஒருமுறை சோழ மன்னனிடம் முரண்பாடு ஏற்பட கோபித்துக் கொண்டு கம்பர் பாண்டிய மன்னனிடம் சென்று தங்கியிருந்தார். சோழமன்னன் தணிவுற்று கம்பரை அழைத்து வரும்படி இணையார மார்பன் என்பவரை அனுப்பி வைத்தார். இணையார மார்பனைப் பார்த்து பாண்டியன், வந்திருக்கும் இவன் யார் என்று கம்பரிடம் வினவ , “இவன் சடையப்ப வள்ளலின் இளையான். என் தம்பி” என்று கம்பர் பதில் உரைத்தார். சடையப்ப வள்ளலுக்கு ஒரு தம்பி இருந்ததாக இக்குறிப்பு வெளிப்படுத்துகிறது.

தீரம் பெரிய தென்னர் பிரான்
சிங்காதனத்தில் சேருமிவன்
ஆரென்று உரைப்ப நம்பி இணை
யார மார்பன் அடியேற்கும்
சாரும் சரராமனுக்கு மொரு
தம்பி எனக்கம் பண்புகழும்
வாரம் பெறு வெண்ணெயர் பெருமான்
வளம்சேர் சோழ மண்டலமே.

- சோழமண்ட ல சதகம்-73

இதே பொருளில் கம்பரின் தனிப்பாடல் வருமாறு :

என்னுடைய தம்பி சரராமனுக்கு இளையான்
கன்னன் மதயானைக் கம்பன் மகன் - துன்னும்
பணையார் நீர்வேலிப் பழனம் சூழ்

சோணாட்டு இணையார் மார்பன் இவன்.

தொண்டை நாட்டில் உள்ள திருவொற்றியூர் என்ற ஊருக்கு ஒருமுறை கம்பர் சென்றார். வல்லி என்ற தாசியைச் சந்தித்தார். அவள் மீது காதல் கொண்டார். சோழநாடு திரும்பியபோது வல்லியையும் உடன் அழைத்து வந்தார். ஒழுகும் வீட்டில் தாசி குடியிருப்பதைக் கண்ட சடையப்ப வள்ளல் கம்பருக்கும் தெரியாமல் அவள் வீட்டுக்கு ஒரே இரவில் நெற்கதிர்களைக் கொண்டு கூரை வேய்ந்து கொடுத்தார். தாசி வல்லி குடியிருந்த இப்பகுதியே கதிர்வேய்மங்கலம் என்று காரணப்பெயராகி பின்னர் கதிராமங்கலம் என்று மருவிப்போனது. இச்செய்யுள் வருமாறு:

தனதானியத்தின் உயர்ந்தோர்கள்
தாமே என்னும் தருக்கேயோ
வினவாது இரவில் நெற்கதிரால்

வேய்ந்தார்வல்லி
வீடதல்லால்
கனிசேர் தமிழுக்குப்
பன்னிரெண்டு
கடகம் யானைக் காடளித்த
மனைவாழ்வு
உடையான் வெண்ணெய் நல்லூர்
வாழ்வான் சோழ
மண்டலமே.

- சோழமண்ட ல சதகம்-74

புலவர் பெருமக்களுக்கு சடையப்பர் யானைகளையும் பரிசளித்துள்ளார் என்ற கூடுதலான செய்தியையும் இச்செய்யுள் பேசுகிறது.

இதே செய்தியைக் கம்பரும் தனது கீழ்வரும் தனிப்பாடலில் தெரிவிக்கின்றார்.

பொதுமாதர் வீட்டைப் புகழ்பெற வேநெல்

கதிராலே வேய்ந்தருளும் கங்கைப் - பதிநேர்

வருவெண்ணெய் நாடன் வருநா வலர்க்குத்

தருவான் அவன் சடையன் தான்.

உலகம் உள்ள அளவும் சந்திரர் சூரியர் உள்ள அளவும் இராமன் சரிதம் பாடும் கம்பராமாயணத்தில் சடையன் சடையன் எனக் கம்பர் விளங்க வைத்தப் பெருமை வேளாண் மரபினர்க்கு உரியது என்று கீழ்காணும் சோழ மண்டல சதகம் பாடல் 75 குறிப்பிடுகிறது.

எண்ணத் தகும்பார் உள்ளளவும்

இரவி மதியம் எழும் அளவும்

கண்ணற்கு இனிய சயராம

கதையில் ஒருபான் கவியமுதம்

வெண்ணைச் சடையன் சடையன் என

விறல் ஆர் கம்பன் விளங்க வைத்த

வண்ணத் துரைவேளாண் பெருமான்

வளம்சேர் சோழ மண்டலமே.

பாண்டிய நாட்டில் கம்பர் தங்கியிருந்த தருணம். மதுரை நகரின் அலங்காரம் எவ்வாறு இருக்கிறது என்று பாண்டிய மன்னன் செருக்கோடு கம்பரிடம் கேட்டான். சடையனின் வெண்ணெய் நல்லூர் இடுகாடு போல் உள்ளது என்று கம்பர் சற்றும் தயங்காது புலவர் செருக்கோடு பதில் தந்தார். பாண்டிய மன்னன் வெண்ணெய் நல்லூரை நேரில் வந்து பார்த்தான். தேவலோகம் போல சடையன் அலங்கரித்திருந்தான் என்று பின்வரும் சோழமண்டல சதகம் பாடல் 76 குறிப்பிடுகிறது.

விள்ளும் மதுரை அலங்கரித்த

வீம்பு நோக்கி வெண்ணெய்நல்லூர்

உள்ளும் இடுகாடு ஒக்கும் என

உரைத்தார் கம்பர் உரைத்தமுறை

அள்ளும் அணியாற் பசும்பொன்னால்

அமராபதி போல் அலங்கரித்தே

வள்ளல் வழுதி அதிசயப்ப

வாழ்ந்தோன் சோழ மண்டலமே

சடையப்பரின் அரண்மனைக் கதவு எப்பொழுதும் திறந்தே கிடக்கும். அடைப்பதில்லை. உதவி என்று வருபவர்களுக்கு அஞ்சேல் என்று அபயம் அளித்துக் காப்பாற்றுபவர் சடையப்பர் என்பதனைக் கம்பர் தனது கீழ்வரும் வெண்பாவில் புகழ்கின்றார்.

மோட்டெருமை வாவிபுக முட்டுவரால் கன்று என்று

வீட்டளவும் பால் சொரியும் வெண்ணையே - நாட்டில்

அடையா நெடுங்கதவும் அஞ்சல் என்ற சொல்லும்

உடையான் சரராமன் ஊர்.

கொழுத்த எருமைகள் குளத்தில் நீராடும். வரால் மீன்கள் அவற்றின் முலைக்காம்பில் முட்டி மோதும். கன்றுகள் முட்டுகின்றனவே என்று எருதுகள் பால் சொரியும் செழுமைப் படைத்த திருவெண்ணெய் நல்லூர் சடையன், அடையா நெடுங்கதவும் அஞ்சேல் என்ற சொல்லையும் உடையவர் என்று கம்பர் குறிப்பிடுகிறார். சரராமன் என்பது சடையப்ப வள்ளலின் இன்னொரு பெயராகும்.

குணங்கொள் சடையன் புதுச்சேரிக்கொடையான் சேதிராயன் முதல்

கணங்கொள் பெரியோர் பலர்கூடிக் கம்பநாடன் களிகூர
இணங்கும் பரிசிலீந்து புவியேழும் புகழ் ஏரெழுபதுடன்
மணங்கொள் திருக்கை வழக்கநூல் வைத்தார் சோழமண்டலமே.

- சோழமண்ட ல சதகம் -81

திருவெண்ணெய் நல்லூர் சடையப்ப வள்ளல், புதுச்சேரி வள்ளல் சேதிராயன் மற்றும் பெரியோர் பலரும் கூடி கம்பருக்குப் பரிசுகள் பல தந்து வேளாண்பெருமக்களைப் புகழ்ந்து பாடும்படி கேட்க, ஏர் எழுபது, திருக்கை வழக்கம் ஆகிய நூல்களை கம்பர் பாடினார். ஏர் எழுபது நூல் அரங்கேற்றம் நடந்து கொண்டிருந்த போழ்து சடையப்ப வள்ளல் வேறு அலுவல் நிமித்தமாக அரங்கின் வெளியே சென்றுள்ளார். வெளியே அவரை ஒரு நாகம் தீண்டிவிட்டது. அது காட்டாமல்

மீண்டும் அரங்கிற்குள் வந்து அமர்ந்து கொண்டார். இதனை அறிந்த கம்பர் வெண்பாக்கள் பாடி பாம்பின் விஷத்தை இறக்கினார். திருக்கை வழக்கம் என்ற தனது நூலில் இந்நிகழ்வை கம்பர்

”பாவலர்தாம் ஏரெழுபதோதி யறங்கேற்றும்

களரியிலேயே காரிவிடநாகங் கடிக்குங்கை”

என்று பதிவு செய்துள்ளார்.

அளிக்கும் படை மூவேந்தரும் கொண்டாடும் விருந்தால் அதிசயமாய்த்

திளைக்கும் திரிகர்த்தராயன் எனச் செப்பும் வரிசைத் திறம் சேர்ந்தோன்

விளைக்கும் அரிசிமாற்றிய நீர் வெள்ளம் கிழங்கு விளையும் என

வளைக்கும் பெருமைப் புதுவையர் கோன் வளம் சேர் சோழமண்டலமே.

- சோழமண்ட ல சதகம் -94

சடையப்பர் அளித்த விருந்தில் மகிழ்ந்த மூவேந்தர்களும் அவருக்கு திரிகர்த்தராயன் என்ற சிறப்புப் பெயரை அளித்தனர். அரிசி கழுவிய நீர் வெள்ளப்பெருக்கெடுத்து வாய்க்கால் வழியோடி கழனிகளில் பாயும் செல்வச்செழிப்புடையவர் சடையப்ப வள்ளல். சில தனிப்பாடல்களும் இவரை வெண்ணை திரிகர்த்தன் எனப் புகழ்கின்றன. மூவேந்தர்கள் என்பது சோழர்குல மன்னர்கள் மூவர் எனவும் கொள்ளலாம்.

காலம் முழுவதும் ஆதரித்துச் சீராட்டிய சடையப்ப வள்ளல் தனது இறுதிகாலத்திலும் தன்னை அரவனைத்ததை கம்பர் ஒரு வெண்பாவாகப் பாடினார்.

ஆன்பாலும் தேனும் அரம்பை முதல் முக்கனியும்

தேன்பாய உண்டு தெவிட்டு மனம் - தீம்பாய்

மறக்குமோ வெண்ணை வருசடையா கம்பன்

இறக்கும் போதேனும் இனி.

இதே பொருள்பட சோழமண்டல சதகம் பாடல் 82 விளக்குகிறது.

ஆன்பால் நறுந்தேன் முக்கனி நீடு அமுதின் சுவையாறுடன் அருந்தித்

தான்பால் அணைய மறப்பதிலைச் சடையான் என்று தமிழ் ஓதும்

தேன்பாய் அலங்கல் கம்பனுக்குச் செழும்பாரிடத்தில் செய்த நன்றி

வான்பாலிருக்கச் செய்து நலம் வைத்தார் சோழ மண்டலமே.

பசும்பால், தேன், முக்கனி, அறுசுவை உணவு என உபசரித்து தமிழ் ஓதியக் கம்பனுக்கு சடையப்பர் நன்றிக்கடன் செய்து வான் உச்சியில் நிலைக்கச் செய்தார்.

மேலும் நம்மாழ்வார் புகழ்பாடும்

சடகோபரந்தாதி, கல்விக்கு அரசியைத் துதிக்கும் சரசுவதியந்தாதி, சத்திரியர் கீர்த்தியைப் புகழ்ந்து பாடும் சிலை எழுபது ஆகிய நூல்களையும் கம்பர் படைத்துள்ளார்.

”கடல் கிழக்குத் தெற்கு கரைபுரள் வெள்ளாறு
குடதிசையில் கோட்டைக் கரையாம் - வட திசையில்
ஏனாட்டு வெள்ளாறு இருபத்து நாற்காதம்
சோணாட்டுக்கு எல்லையெனச் சொல்”

என்ற கம்பரின் தனிப்பாடல் ஒன்று அவர்காலத்து சோழநாட்டு எல்லைகளைக் கிழக்கே கடல், தெற்கே வெள்ளாறு, மேற்கே கோட்டக்கரை (மதுக்கரை), வடக்கே வடவெள்ளாறு என்று குறிப்பிடுகிறார்.

தொண்டை நாட்டின் ஒரு பகுதி நடுநாடு.

திருவெண்ணெய் நல்லூர் நடுநாட்டில் வருகின்றது. பிற்காலச் சோழ மன்னர்கள் ஆட்சியின் கீழ் சுமார் 400 ஆண்டுகள் நடுநாடும் இருந்துள்ளது. நடுநாட்டைச் சார்ந்த சுந்தரர், தொண்டை நாட்டைச் சார்ந்த சேக்கிழார் இவ்விருவர் பற்றியும் சோழமண்டல சதகத்தில் குறிப்புகள் இடம்பெற்றுள்ளவை கவனத்தில் கொள்ளப்பட வேண்டும்.

# 7. புதுவை - புதுச்சேரி

சோழமண்டலச் சதகத்தில் புதுவைச் சடையன் (46), புதுச்சேரிக் கொடையான் சேதிராயன் (81), புதுவையர் கோன் (94), கம்பரின் தனிப்பாடலில் காணும் புதுவையான் இச்சொற்கள் ஆய்வுக்குரியன.

திருவாரூர் பகுதியையொட்டி அடியக்கமங்கலம் புதுச்சேரி என்று ஒரு ஊரும், கும்பகோணத்தையொட்டி புதுவை என்று ஒரு ஊரும் உள்ளது. சோழமண்டல சதகத்தில் இவ்வூர்கள் இடம்பெறுவதால் சடையப்பரும், சேதிராயரும் மேற்படி பகுதியைச் சார்ந்தவர்கள் என்பாரும் உளர்.

அடியக்க மங்கலம் புதுச்சேரி, கதிராமங்கலத்தில் இருந்து சுமார் 60 கி.மீட்டர்

தொலைவில் உள்ளது. நாம் உசாவிய அளவில் சடையப்பர், சேதிராயர் என்ற பெயர்கள் அப்பகுதியில் விழிப்பில் இல்லை. திருவாரூர் நகைச்சுவை இமையம் திரு.சண்முகவடிவேல் அவர்களுடன் உரையாடியப் போதும் இதனையே உறுதிசெய்தார்.

கும்பகோணத்தையொட்டிய புதுவை என்பது ஒரு சிற்றூர். கதிராமங்கலத்திற்கும் அண்மையில் உள்ளது. இப்பகுதியில் சடையப்பருக்கும் நில உரிமை இருந்திருக்கலாம். புதுச்சேரி சேதிராயர் என்ற வள்ளலும் இவருக்கு துணையாக இருந்திருக்க வாய்ப்புண்டு. மக்களிடம் இவை குறித்த ஞானம் எதவுமில்லை.

தொண்டை நாட்டிற்கும், சோழநாட்டிற்கும் இடைப்பட்ட பிரதேசம் நடுநாடு. இதற்கு அருவாநாடு, சேதிநாடு என்ற பெயர்களும் உண்டு.

சேதிராயர் என்பவர் நடுநாட்டை ஆண்ட அரச குலத்தினர். சென்னைப் பல்கலைக்கழகத்தின் தமிழகராதி சேதிராயன் என்பதற்கு தமிழகத்தின் நடுநாட்டரசன் என்று பொருள் தருகிறது.

சோழர்களின் கிளைக்குடியாக சேதிநாட்டுக்குலம் இருந்துள்ளது. சேதிராயர் மற்றும் மலையமான் என்ற பட்டத்துடன் இவர்கள் ஆட்சி செய்துள்ளனர்.

இரண்டாம் குலோத்துங்கன் (1133-1150) ஆட்சிக்காலத்தில் திருக்கோவலூரைச் சார்ந்த மலைநாட்டை ஆண்டவன் விக்கிரமசோழசேதிராயன். இவன் மகன் விக்கிரமச்சோழக் கோபலராயன் என்று வரலாறு பேசுகிறது. மெய்ப்பொருள் நாயனார், மலையமான் திருமுடிக்காரி இவர்கள் இவ்வம்சத்தைச் சார்ந்தவர்களே.

இன்றையப் புதுச்சேரி மாநிலத்தில் சேதுராப்பட்டு (சேதிராயன்பட்டு) என்னும் பெயரில் ஊர் உள்ளது. விழுப்புரம், திருவெண்ணெய்நல்லூரில் சடையப்பர் வாழ்ந்தக் காலத்தில் இந்தப் புதுவைக்கு தொடர்பு உள்ளவராகவும், சேதிராயர் என்ற வள்ளலும் இப்புதுவையில் இருந்திருக்கலாம் என்றும் கருத இடமுண்டு.

இலங்கையின் கண்டியின் அரசரான பரராஜசிங்கத்துடன் சடையப்பருக்கு நெருங்கிய தொடர்பு இருந்ததாகவும், ஈழத்தில் பஞ்சம் வந்த காலத்தில் கப்பல்களில் உணவுப்பண்டங்களை சடையப்ப வள்ளல் அனுப்பி வைத்ததாகவும், திருவெண்ணெய்நல்லூர் (விழுப்புரம்) வடக்குத்தெரு முதல் வீட்டில் சடையப்பர் வாழ்ந்தார் என்றும் புதுச்சேரி கல்வெட்டுச் செய்தி உண்டு என்றக் குறிப்பைக் காண முடிந்தது.

கப்பல் போக்குவரத்துக்கான துறைமுகம் இந்த புதுச்சேரியில் உண்டு. ஆனால் அப்படி ஒரு கல்வெட்டு இல்லையென்று வில்லியனூர் கல்வெட்டு ஆய்வாளர் வெங்கடேசன் என்னிடம் கூறினார்.

# 8. தொண்டை மண்டல சதகம் - சடையப்பர்

இது 17 ஆம் நூற்றாண்டில் படிக்காசு புலவரால் தொண்டை மண்டல வேளாளர் மீது பாடப்பட்ட நூலாகும். தொண்டை மண்டலம் என்பது அல்லாமல் தொண்ட மண்டலம் என்பதே சரியானது என்று வள்ளலார் ஒரு இலக்கண நூல் படைத்துள்ளார். ஆதொண்டன் என்பவன் ஆண்டப் பகுதி இது என்பதனால் ஆதொண்ட மண்டலம், தொண்ட மண்டலம் என்றாயிற்று என்பார் வள்ளலார்.

தெள்ளத் தெளிந்தவர் செய்தக்கதோர்முறை செய்யிலையா

எள்ளத்தனை மலையத்தனையோ என்பது இன்றறிந்தோ

முள்ளற்கரிய துடையாடை கீறியது ஒன்றுமொரு

வள்ளல் தகைமையோடு ஒத்துளதால் தொண்டை மண்டலமே

இப்பாடலின் உறை பொருள் கதையாக உரையாசிரியர் முன்னிறுத்தும் சடையப்ப வள்ளலின் கதை வருமாறு:

வெண்ணெய் நல்லூர் சடையப்ப வள்ளல் ஒரு பெரும் செல்வந்தர். புதிதாக பட்டத்துக்கு வந்த சோழ மன்னனை அவர் சென்று கண்டுகொள்ளவில்லை என்ற ஆத்திரம் மன்னனுக்கு இருந்தது. செல்வச் செருக்கால்தான் தன்னைக் காண வரவில்லை என்று மன்னன் சடையப்பரது செல்வம் அத்தனையும் கவர்ந்து கொண்டான். அதன் பின்னரும் சடையப்பர்மன்னரைக் காணச் செல்லவில்லை. அந்தத் தருணத்தில் சீனத்து பட்டு வியாபாரி

ஒருவன் மன்னனிடம் வந்தான். இழையாயிரம் பொன்பெற்ற பட்டு ஒன்று அவனிடம் இருந்தது. அதனை விலை கொடுத்து வாங்கிட மன்னனிடம் போதியப் பொருள் இல்லாததால் வாங்காமல் விட்டுவிட்டான்.

அந்த வியாபாரி சடையப்பரிடம் சென்றான். சடையப்பர் அந்தப் பட்டாடையை வாங்கி தரித்துக்கொண்டார். இச்செய்தி அறிந்த மன்னன் இன்னும் அவமானம் அடைந்தான். சடையப்பரை வலுக்கட்டாயமாக அரச சபைக்கு வரவழைத்தான். தன்னைக் காண வராததன் காரணத்தை வினவினான். வேட்டியைத் தூக்கிக்காட்டுவது சபை மரியாதை ஆகாது என்பதால், தான் கட்டியிருந்த பட்டாடையைக் கிழித்து துடைப்புண்ணைக் காண்பித்து, துடையில் சிலந்தி நோய் என்பதால் வந்துகாண இயலவில்லை என்று சொன்னார். தான் வாங்க

முடியாத பட்டாடையை சடையப்பர் அதன் மதிப்பை பொருட்படுத்தாமல் கிழித்தது கண்டு பிரமித்து போனான் மன்னன்.

தாயினும் நல்ல தயையுடை யோர்கள் தமதுடலம்
வீயினும் செய்கை விடுவர் கொல்லோ தங்கண் மெய்ம் முழுதும்
தீயினும் வீழ்வர் முதுகினுஞ் சோறிட்டுச் சீறரவின்
வாயினும் கையிடுவார் அவர்காண் தொண்டை மண்டலமே.

“சீர் அரவம் வாயில் கைவிடுவார்” என்பதற்கான உரையாசிரியர் விளக்கும் சடையப்பர் கதை இதோ....

சடையப்ப வள்ளலிடம் பகைமைப் பாராட்டிய சோழ மன்னன் ஏவுதலால் வித்வான் கூட்டம் ஒன்று இரவு நேரத்தில் விருந்தினர்களாக சடையப்பர் இல்லம் வந்து சேர்ந்தது. விருந்து உபசரிக்க

வீட்டில் ஒன்றும் பொருள் இல்லாமையால் தன் மனைவியின் தாலியை விற்று அதன் மூலம் விருந்தினர்களை உபசரித்தார்.

தன்னுடைய வாழ்ந்து கெட்ட நிலைக்காக மனம் வருந்தி தன்னை மாய்த்துக்கொள்ள அருகில் இருந்த பாம்பு புற்றுக்குள் கையை விட்டார். பாம்பு அவரைத் தீண்டாமல் தன் வாயில் இருந்த மாணிக்கத்தை உமிழ்ந்தது. இவ்விலையுயர்ந்த மாணிக்கத்தை வந்த புலவர்களுக்கேச் சன்மானமாகக் கொடுத்து அனுப்பினார். செய்தி அறிந்த மன்னன் இதனை நம்பாமல் சடையப்பரிடம் வந்து “சடையப்பரே மீண்டும் நீவீர் புற்றுக்குள் கைவிடும். மாணிக்கம் வருகிறதா பார்ப்போம்” என்றான். அவ்வாறே சடையப்பரும் செய்தார். சடையப்பர் தன் வள்ளல் தன்மையை இழந்துவிடக் கூடாதே என்பதற்காக புற்றுக்குள் இருந்த பாம்பு மீண்டும் தன் ஜீவ

ரத்தினத்தைக் கக்கிக் கொடுத்துவிட்டு உயிர் துறந்தது. பாம்பும் துணை செய்தது அறிந்து மன்னன் வெட்கிப்போனான்.

விருந்தோம்பல் இரவலர்க்கு ஈதல் என்பன தமிழர் அறம். இதனின்று தவறுவதை இழுக்காக தமிழர்கள் கருதினர். வறிய நிலையில் தவிக்கும் கொடையாளரிடம் விருந்தினர்களை அனுப்பி வைத்துப் பழிவாங்குதல் என்பது பகைவர் குணம். மகாபாரதத்தில் துரியோதனன் துருவாச முனிவரை வனவாசத்தில் வாழ்ந்த பாண்டவர்களிடம் அனுப்பி வைத்தக் கதை இது போன்றதே.

மீனவ நாட்டினும் செம்பியன் நாட்டினும் வில்லவர்
கோனானவன் நாட்டினும் மிக்கதென்பார்கள் அதிசயமோ
கோனவன் நாட்டின் முளையமுதாகிற் குலவமுதார்

வானவர் நாட்டினும் மிக்கதன்றோ
தொண்டை மண்டலமே.

“முளையமுதாகிற்று” என்பதற்கு பொருள் சொல்ல வந்த உரையாசியர் சடையப்பர் கதையிது எனப் பதிவு செய்கிறார்.

சோழ, சேர, பாண்டியர் மூவராட்சியினும் சிறப்பு மிக்கது ஆதொண்டன் ஆளும் தொண்டை மண்டலம் என்கிறார்.

திருவெண்ணெய் நல்லூர் சடையப்ப வள்ளல் கொடுத்துக் கொடுத்துச் செல்வம் குறைந்ததால் இனி கொடுக்க ஒன்றும் இல்லையே என்ற இயலாமையால் வருந்தி நின்ற போது, இரட்டைப் புலவர் உள்ளிட்ட வித்வான் கூட்டம் ஒன்று நள்ளிரவில் சடையப்பர் மாளிகையை வந்தடைந்தது. சடையப்பர் என்று புலவர்கள் பேசிக்கொண்டது சடையப்பர் செவியில் விழுந்தது. தன் மனைவியை எழுப்பி அழைத்துக் கொண்டு

சென்று தம் கழனியில் விதைத்திருந்த நெல் முளையை வாரி அலம்பி எடுத்து வந்து தீமூட்டி பதப்படுத்தி அரிசியாக்கி அன்னம் செய்து புலவர் கூட்டத்திற்கு விருந்தளித்தார். விருந்தோம்பலுக்கு முதன்மை அளித்தது தொண்டை மண்டலம் என்கிறார் நூலாசிரியர்.

சேக்கிழார் பெருமான் பெரிய புராணத்தில் இளையான்குடி மாறனார் சிவனடியார்க்கு விருந்தோம்பிய பண்பை இவ்வாறு எடுத்துரைத்திருப்பார்.

சோழமண்டல சதகம் சடையப்பரின் செல்வ வளம் படைத்த வாழ்க்கையைப் பதிவு செய்துள்ளது. ஆனால், தொண்டைமண்டல சதகம் சடையப்பரின் பிற்கால வறுமைநிலை வாழ்க்கையைப் பதிவு செய்துள்ளது.

# 9. சடையப்ப வள்ளல் காலம்

திருவெண்ணெய் நல்லூர் சடையப்ப வள்ளல் அரசக் குடும்பத்திற்கு நிகரானச் செல்வ வளம் பெற்றவர் என்று பல குறிப்புகள் கிடைக்கின்றன. கால வரிசைப்படி இவரது வரலாற்றுக் குறிப்புகள் கிடைக்கப் பெறாதது தமிழர்களுக்கும், தமிழ் மண்ணுக்கும் ஏற்பட்டுள்ள குறைபாடே.

ஆய்வாளர் டாக்டர் சு. குலசேகரன் அவர்கள் கம்பர் காலம் 12 ஆம் நூற்றாண்டே என்கிறார். பெரும்பான்மையான தமிழ் அறிஞர்களின் கருத்தும் இதுவாகவே உள்ளது. அவரது ஆய்வு வரிசையில் ஒட்டக்கூத்தர் பிறந்தது கி.பி.1080, கம்பர் பிறந்தது கி.பி.1140 என்று சுட்டப்பட்டுள்ளது.

ஒட்டக்கூத்தர் (1080-1170) விக்கிரம சோழன், இரண்டாம் குலோத்துங்கன், இரண்டாம்

இராசராசன் ஆகிய மூவர் ஆட்சியிலும் அவைப்புலவராக இருந்துள்ளார். விக்கிரமன் சோழ உலா (1125), இரண்டாம் குலோத்துங்கன் பிள்ளைத்தமிழ் (1132), இரண்டாம் இராசராசனைப் பாடும் தக்கயாகப்பரணி (1168) ஆகிய நூல்களை ஒட்டக்கூத்தர் இயற்றினார். கி.பி.1170 ல் மறைந்தார்.

ஒட்டக்கூத்தருக்கும் பின்னால் ஒருசில வயதுகள் இளையவராய் சேக்கிழார் பிறந்து இருக்க வேண்டும். விக்கிரம சோழன் அரசில் கி.பி.1125 ல் சேக்கிழார் முதல் அமைச்சராகப் பதவியேற்றுள்ளார். விக்கிரமன் மறைவிற்குப் பின் இரண்டாம் குலோத்துங்கன் கி.பி. 1135 ல் பட்டத்துக்கு வருகிறார். இவருக்கு அநபாயச்சோழன் என்று இன்னொரு பெயர் உண்டு.

அநபாயச்சோழன் சீவக சிந்தாமணி என்ற இலக்கியத்தை மிகவும் விரும்பி படித்து வந்தான். இது ஒரு சமண இலக்கியம். காமரசம் மிகுந்தது.

சேக்கிழார் சைவ மரபில் ஊறியவர். மன்னன் சமண சமயம் சார்ந்து விடுவானோ என்ற ஐயப்பாட்டில் காமரசம் மிகுந்த சிற்றின்ப இலக்கியம் சீவக சிந்தாமணியைப் புறம் தள்ளி, சைவ சமயப் பெரியோர்களின் வாழ்க்கையைப் பயிலுமாறு அறிவுறுத்தினார். அறுபத்து மூன்று நாயன்மார்களின் கதையை எடுத்துச்சொன்னார். மன்னனின் வேண்டுகோளுக்கிணங்க திருத்தொண்டர் புராண (பெரிய புராணம்)த்தை சேக்கிழார் படைத்தார். இப்புராணத்தை எழுதுவதற்காகவே தனது முதல் அமைச்சர் பதவியைத் துறந்தார். சேக்கிழாரின் இளவல் பாலவறாயர் அப்பதவியை ஏற்றார். கி.பி.1135ல் தொடங்கப்பெற்ற பெரிய புராணம் பணி

கி.பி.1140 ல் நிறைவேறியது. சிதம்பரத்தில் அரங்கேற்றம் செய்யப்பட்டது. அரங்கேற்ற நிகழ்வில் ஒட்டக்கூத்தர் கலந்துகொண்டுள்ளார். இரண்டாம் குலோத்துங்கன் பட்டத்துக்கு வந்து ஐந்து ஆண்டுகள் கழித்தே கம்பர் கி.பி.1140-ல் பிறந்துள்ளார்.

சேக்கிழாருக்குப் பின்னால் ஒரு சில ஆண்டுகள் வயது இளையவராய் சடையப்ப வள்ளல் பிறந்திருக்கவேண்டும். அதே பொழுது பெற்றோரை இழந்த கம்பரை இளம் வயதில் எடுத்து வளர்த்தார் என்று நோக்குமிடத்து, சடையப்ப வள்ளல் நிர்வாக ஆளுமை மிக்க வயதினராக இருந்துள்ளார்.

இரண்டாம் இராசராசன் (1146 - 1173) மறைவுக்குப்பின் இரண்டாம் இராசாதிராசன் கி.பி. 1173 ல் பட்டத்திற்கு வந்தார். இவன் காலத்தில்

கம்பராமாயணம் எழுதும் பணியைக் கம்பர் தொடங்கிவிட்டார். இரண்டாம் இராசாதிராசன் கி.பி. 1178 ல் ஆந்திர பகுதிக்கு இடம் பெயர்ந்து விட்டதால் மூன்றாம் குலோத்துங்கன் கி.பி. 1178 ல் இளவரசு பட்டம் பெற்று கி.பி.1180 ல் சக்கரவர்த்தி ஆகிறான். இவனது ஆட்சிக்காலம் (1178 - 1218)

கம்பராமாயணம் அரங்கேற்றத் தொடக்கம் 07.03.1186 என்றும் முடிவு 1188 என்றும் டாக்டர்சு.குலசேகரன் கணிக்கிறார். சடையப்ப வள்ளல் கம்பராமாயணம் அரங்கேற்றத்திற்கு பின்பும் வாழ்ந்துள்ளார். சடையப்ப வள்ளலின் வாழ்வின் இறுதிகாலத்தில் மெய்கண்ட தேவர் தனது நான்காம் வயதில் திருவெண்ணை நல்லூர் (விழுப்புரம்) தனது தாய்மாமன் வீட்டிற்கு தன் தாயாரோடு வருகின்றார். மெய்கண்டதேவர் திருவெண்ணை நல்லூரில் முக்தி அடைந்த ஆண்டு கி.பி. 1223. சடையப்பரின் காலம் (1110-

1195), மெய்கண்டாரின் காலம் (1185-1223) என்று ஓரளவு யூகிக்க முடிகின்றது.

இரண்டாம் இராசாதிராசன் காலம் முதல் பிற்கால சோழர்களின் காலம் வரை திருவெண்ணைய் நல்லூர் “இரண்டாம் இராசராச வளநாட்டுத் திருமுனைப்பாடி திருவெண்ணைய் நல்லூர் நாட்டுப் பிரமதேயம் திருவெண்ணெய்நல்லூர்” என்றே வழங்கப்பட்டு வந்ததாக கல்வெட்டுச் செய்திகள் தெரிவிக்கின்றன.

திருமுனைப்பாடி நாடு, அருவாநாடு, நடுநாடு, சேதிநாடு என்று வழங்கப்பெற்ற நடுநாட்டின் பகுதியான திருவெண்ணைநல்லூரும் ஒரு நாடு என்பதை மேற்கண்ட கல்வெட்டு புலப்படுத்துகிறது. இரண்டாம் குலோத்துங்கனுக்குப் பிறகு சுமார் 400 ஆண்டுகள் நடுநாடு பிற்கால சோழர்களின்

ஆட்சிக்கு உட்பட்டிருந்தது என்று வரலாறு பேசுகிறது.

நடுநாட்டின் திருநாவலூர், திருவதிகை, திருமுதுகுன்றம், பெண்ணாகடம், திருமாணிக்குழி, திருக்கோவலூர், திருவெண்ணெய்நல்லூர் ஆகிய பாடல் பெற்ற சிவாலயங்கள் பிற்காலச் சோழர்களின் ஆட்சியில் சிறப்பு பெற்றன எனவும் கல்வெட்டுகள் கூறுகின்றன.

சேக்கிழாரின் பெரிய புராணத்திற்கு பிறகு கம்பராமாயணம் என்ற வைணவ இலக்கியம் கம்பரால் படைக்கப்பட்டது. சைவம் போற்றிய சோழர்கள் ஆட்சியில் கம்பரும், சடையப்பரும் இதனைச்சாதித்தனர் என்பதுவும் ஒரு முக்கியமான நிகழ்வாகும்.

# 10. சடையப்ப வள்ளல் - கள ஆய்வு

**வெண்ணெய்நல்லூர் (கதிராமங்கலம்) :**

தேரழுந்தூருக்கு வடக்கே ஷேத்திரபாலபுரத்தைக் கடந்து கதிராமங்கலம் சென்றடைந்தேன். கம்பர் காலத்தில் வெண்ணெய் நல்லூர் என்று வழங்கப்பட்ட ஊரே காலப்போக்கில் கதிராமங்கலம் என்று மருவிப் போனது என்கின்றனர்.

1892-ல் தமிழறிஞர் உ.வே.சாமிநாத ஐயர் அவர்கள் வெண்ணெய்நல்லூர் என்றிருந்த இவ்வூரைப் பார்வையிட்டதாகவும், மேலும் இவ்வூர் சடையப்ப பிள்ளை கிராமம் என்று வழங்கப்பட்டதாகவும் குறிப்பு எழுதி வைத்துள்ளார்.

இவ்வூர் சிவாலயத்தில் வழிபாட்டில் உள்ள பிள்ளையார், “வெண்ணெய்நல்லூர் பிள்ளையார்” என்றே பொறிக்கப்பட்டு காணப்படுகிறது.

**கதிராமங்கலம் :**

கம்பராமாயணம் அரங்கேற்றம் முடிந்ததும் ஊர் திரும்பியக் கம்பரை வரவேற்பதற்காக சடையப்ப வள்ளல் ஊரின் முகப்பில் இருந்து நெற்கதிர்களால் வேயப்பட்ட பந்தல் இட்டார். அதனால் கதிர்வேய்மங்கலம் என்று ஊர் பெயராயிற்று. காலப்போக்கில் கதிராமங்கலம் என்றும் வழக்காகிவிட்டது. பெரும்பாலான ஊர் மக்கள் நம்பும் கதை இது.

கம்பரின் தாசி வல்லி என்பவள் வாழ்ந்த குடிசை, ஓட்டையும் ஒழுகலுமாக இருந்ததைக் கண்ட சடையப்ப வள்ளல், அவள் வீட்டுக்கு ஒரே இரவில் நெற்கதிர்களால் கூரைவேய்ந்து

கொடுத்தார். அதனால் தாசி வாழ்ந்த அப்பகுதிக்கு கதிர்வேய்மங்கலம் என்று பெயராயிற்று என சிலப் பாடல்கள் சான்று பகர்கின்றன.

இரண்டு கதைகளும் மனதில் ஊசலாட ஊரைச் சுற்றிப்பார்த்தோம். வெண்ணெய்நல்லூர் என்றப் பெயரை எங்கும் பார்க்க முடியவில்லை.

**சடையப்பர் திடல் :**

கதிராமங்கலம் முதன்மைச் சாலையில் ஒரு குறுகியத் தெருவின் முகப்பில் சிட்டியூனியன் பேங்க் தனது விளம்பரப் பெயர்பலகையை வைத்திருப்பதைக் கண்டேன். “சடையப்ப வள்ளல் திடல், செல்லும் வழி” என்று அம்புக்குறி காட்டப்பட்டிருந்தது. நெஞ்சில் ஊற்றெழுந்த மகிழ்ச்சி சிட்டியூனியன் பேங்கை வாழ்த்தியது. அவ்வழியே தொடர்ந்தேன். வழியில் மூன்று இடங்களில் அவ்வாறே பெயர்ப்பலகைகள்

வைக்கப்பட்டுள்ளன.

முதன்மைச் சாலையில் இருந்து ஊருக்கு வடகிழக்கே சுமார் ஒன்றரைக் கி.மீ. தூரம் சென்றவுடன் ஒரு பெரியத் திடல் வயல்வெளிகளுக்கு நடுவில் உள்ளது.

இந்தத் திடலின் நிலப்பரப்பு மட்டும் 60 வேலி என்று உ.வே.சா குறிப்பிடுகிறார். ஒரு வேலி என்பது இன்றைய நில அளவில் 6.17 ஏக்கர். அதாவது 5 காணி ஆகும். 60 வேலி என்பது 370 ஏக்கர் நிலமாகும். சடையப்ப வள்ளல் வாழ்ந்த பூமி இது என மக்கள் அடையாளம் காட்டுகின்றனர். பெரும் நிலக்கிழார்கள் பல காலமாக இந்த திடலைச் சுற்றியிருந்த ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலப்பரப்பை ஆக்கிரமித்து விட்டார்கள் என்பது பொதுமக்கள் கருத்தாக உள்ளது. இன்று சடையப்ப வள்ளல் திடலில் அரசு

உயர்நிலைப்பள்ளியும், அரசு ஆரம்ப சுகாதார நிலையமும் செயல்படுகின்றன.

**ஆதிமூலப்பெருமாள் :**

எஞ்சியிருக்கும் பெருந்திடல் பகுதியில் வடமேற்கில் ஆதிமூலப்பெருமாள் ஆலயம் உள்ளது. சடையப்பர் குடும்பம் வழிபட்டக் குலதெய்வம் ஆதிமூலப்பெருமாள் என்கின்றனர்.

அகன்ற மார்போடு நெடிதுயர்ந்து நின்ற கோலத்தில் மிகவும் அழகான வடிவத்தில் காட்சியளிக்கின்றார் பெருமாள்.

பெரு மாளின் இருபுறத்திலும் ஸ்ரீதேவி, பூதேவி சிலைகள் நின்ற கோலத்தில் உள்ளன. ஏற்கனவே இருந்த புராதன அம்மன் சிலைகள் இரண்டும் திருடுபோனதால் அண்மையில் ஊர் மக்கள் கோயிலை புனரமைப்புச் செய்து, புதிய அம்மன் சிலைகளைப் பிரதிஷ்டை செய்துள்ளனர்.

கோயிலின் மேற்கூரை சுவர்மேல் இதே சிட்டியனின் பேங்க் வைத்திருக்கும் பெயர்ப் பலகையில் ஒட்டக்கூத்தன் திடல், திருவெண்ணெய் நல்லூர். கதிராமங்கலம் என்று எழுதியிருப்பதைக் காண முடிந்தது. “ஒட்டக்கூத்தன் திடல்” என்று எழுதப்பட்டுள்ளதன் காரணம் விளங்கவில்லை.

**ஒட்டக்கூத்தர் :**

இவர் கம்பரின் சமகாலப் புலவர். கம்பருக்கும் வயதில் மூத்தவர். இவரை ஆதரித்தப் புரவலர் காஞ்சிபுரத்தைச் சேர்ந்த காங்கேயன் என்பவர். காங்கேயன் நாலாயிரக்கோவை என்ற நூலை இயற்றி ஒட்டக்கூத்தர் தம் புரவலருக்கு நன்றி செலுத்தியுள்ளார்.

ஒட்டக்கூத்தர் விக்கிரம சோழன், இரண்டாம் குலோத்துங்கன், இரண்டாம் இராசராசன்

ஆகிய மூவர் ஆட்சியிலும் அவைக்களப் புலவராக இருந்தவர். வரலாற்றில் சோழ மன்னர்களுக்கும் கம்பருக்கும், சோழ மன்னர்களுக்கும் சடையப்பருக்கும் இடையில் பல முரண்பாடுகள் இருந்துள்ளன. சடையப்ப வள்ளலிடம் ஒட்டக்கூத்தர் வாழ்ந்ததாகக் குறிப்பு எதுவும் இல்லை .

ஊர் மக்களின் சாதிக் குழுக்களுக்கு இடையே நல்லிணக்கப்படுத்தும் முயற்சியாக இப்படி எழுத நேர்ந்ததோ என்ற ஐயம் எமக்குண்டு.

ஒட்டக்கூத்தர் சமாதி தாராசுரம் வீரபத்ரக் கோயிலுள் உள்ளது. நினைவிடமாக வழிபாடும் உள்ளது.

**புகழேந்திப் புலவர் :**

தொண்டை மண்டலம் பொன்விளைந்த களத்தூரில் பிறந்தவர் புகழேந்திப் புலவர்.

நளவெண்பாவை இயற்றியவர். வரகுணபாண்டிய மன்னனின் அவைப் புலவராக இருந்தவர். சந்திரன் சுவர்க்கி என்ற வள்ளல் இவரை ஆதரித்தவர். தாம் இயற்றிய நளவெண்பாவில் நன்றிக்கடனாக இவ்வள்ளலைப் புகழ்ந்து பாடியுள்ளார்.

கம்பர் பிறந்த நாள், இறந்த நாள் இவ்விரண்டையும் நினைவுகூர்ந்து பாடல்கள் இயற்றியுள்ளார். வயதில் கம்பருக்கும் இளையவர் இவர். ஒட்டக்கூத்தருக்கும் புகழேந்தி புலவருக்கும் வயது வித்தியாசம் அதிகம். ஆனால், இருவருக்கும் இடையில் பல பந்தயப் பாடல் போட்டிகள் நடைபெற்றுள்ளன என்பார். சான்றுகள் தேவை.

**சடையப்ப வள்ளல் ஆத்மலிங்கம் :**

கிழக்கு நோக்கி ஓடும் காவிரி கதிராமங்கலத்தில் வடக்கு நோக்கிப் பாய்கிறது.

காவிரி மேட்டுத்தெருவில் தான் சடையப்பர் பிறந்தார் என்கின்றனர். இதேப் பெயரில் இன்றும் அத்தெரு இருக்கிறது.

கம்பர் பாடும் கோசலை நாட்டு வளம் கதிராமங்கலம் திருவெண்ணெய்நல்லூருக்கும் பொருந்தும். சோழநாட்டு வளத்தை ரசித்தக் கம்பர் கோசலை நாட்டுக்கும் பொருத்திப் பாடினார். கழனிவளம், உழவர் பாடு, விளைப்பொருட்கள், உழவர் உழத்தியர் காதல் என எல்லாம் சோழநாட்டுக்கும் பொருந்துபவை.

பெண்ணை வெண்ணெய் நல்லூரும் கழனி வளம் கொண்டவை தான். கம்பர் பண்ணை வெண்ணெய் நல்லூர் என்று பாடியதற்கு, பண்ணை என்றச் சொல் பெண்ணை என்றும் பொருள் குறிக்கும் என்பது அறிஞர்கள் கருத்து.

சடையப்பர் திடலுக்குப் போகும் சாலையில்

முகப்பிலேயே சாலையின் வடக்குச் சாரியில் சடையப்ப வள்ளல் சமாதி உள்ளது. புதர்கள் மண்டிக்கிடந்த இடத்தைச் சுத்தம் செய்து, சமாதி புனரமைக்கப்பட்டு, கொட்டகை அமைக்கப் பட்டுள்ளது. அண்மையில் ஆதிமூலப்பெருமாள் கோயிலைப் புனரமைத்த கிராம மக்கள் இதனையும் மறவாமல் செய் து ள்ள து பாராட்டுக்குரியதாகும்.

சடையப்பர் சமாதி, “சடையப்ப வள்ளல் ஆத்மலிங்கம்” என்று அழைக்கப்படுகிறது. மக்கள் மத்தியில் சிவன் கோயில் என்றே அறியப்படுகின்றது. மக்கள் வழிபாடும், பூஜைகளும் நடைபெறுகின்றன.

**ஊர் மக்களிடம் பரவிக்கிடக்கும் சோகக் கதை இது.**

சடையப்பர் மன்னர் போல வாழ்ந்தவர்.

ஒரு முறை சோழமன்னன் தன் படைகளுடன் பூம்புகார் கடற்கரை நோக்கிப் பயணம் ஆனான். சடையப்பர் மாளிகை வழியாக படை சென்றது. சடையப்பர் மாளிகை பந்தல் தோரணங்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. மேளதாளங்கள் முழங்கிட மக்கள் கூட்டம் மாளிகை முன் நிரம்பி வழிந்தது. வாணவேடிக்கைகள் ஓயாமல் ஒலித்தன. வண்ண ஒளிகளை உமிழ்ந்தன.

சோழமன்னன் சடையப்பர் மாளிகையை ஏதோ கோயில் என்று எண்ணிக் கும்பிட்டுத் தொழுதான். அருகில் இருந்த அதிகாரிகள் "சடையப்பர் தாயார் காலமாகிவிட்டார். தாயாருக்கான இறுதிச்சடங்குகள் நிறைவேற்றப்படுகின்றன" என்றனர். பிணத்தைத் தொழுதேனா என்று மன்னன் ஆத்திரமடைந்தான். பூம்புகார் சென்று திரும்புவதற்குள் சடையப்பர் மாளிகை சுவடு தெரியாமல் மறையவேண்டும் என்று

படைகளுக்குக் கட்டளையிட்டான். அவ்வாறே சடையப்பர் மாளிகை இடித்துத் துவம்சம் செய்யப்பட்டது என்று கிராம் மக்கள் பலரும் இக்கதையைச் சொல்கின்றனர்.

மாளிகையின் இடிபாடுகள் இன்றும் கழனிகளைக் கிளறும் போது கிடைக்கின்றன. அகலமான பெரிய பலகை கற்கள் நிலத்தடியில் அகழக்கிடைக்கின்றன என்கின்றனர். மன்னன் சென்ற உத்தேச வழித்தடத்தையும் காண்பித்தனர்.

**திருவெண்ணெய்நல்லூர் (விழுப்புரம்) :**

படிக்காசுப் புலவரால் இயற்றப்பட்ட தொண்டை மண்டல சதகம் என்னும் நூலின் பதிப்பு ஒன்று 1887-ல் வெளியானது. அப்பதிப்புக்கு அகஸ்தியப்பர் முதலியார் என்பவர் அணிந்துரை செய்துள்ளார். அவ்வுரையில் "சடையப்ப முதலியார் மரபில் வந்த சுவேதயனப் பெருமாள்

என்னுந் திருநாமமுடைய திருவெண்ணெய் நல்லூர் மெய்கண்டதேவர் சுத்தாத்துவித சித்தாந்த ஸ்தாபகராய் சிவஞானபோதமென்னும் அருமை ஞான சாத்திரத்தைத் திரவிடத்தில் மொழி பெயர்த்துத் தந்தருளினார்” என்ற குறிப்பு உள்ளது.

”உயர்சிவஞானபோதம் உரைத்தோன்

பெண்ணைப் புனல்சூழ் வெண்ணெய்ச்சுவேதனன்

பொய்கண்டகன்ற மெய்கண்ட தேவன்”

- சிவஞானபோதம், சிறப்புப் பாயிரம்.

இன்றைய விழுப்புரம் மாவட்டம், திருவெண்ணெய் நல்லூரில் சடையப்பர் வாழ்ந்த மாளிகை; சடையப்பர் மடம் என்றும், மெய்கண்ட தேவர் மடம் என்றும் வழங்கப்பட்டு வந்ததாகவும், சடையப்பர் மரபில் வந்தவர் தான் மெய்கண்ட

தேவர் என்ற வரலாறும் இன்னொருபுறம் உள்ளது.

இதனோடு கூடுதலாக சான்றுகள் கிடைக்கலாம் என்ற நம்பிக்கையில் 08.05.2022 ஞாயிற்றுக்கிழமையன்று நேரில் விழுப்புரம் மாவட்டம், திருவெண்ணெய் நல்லூர் சென்றேன். சடையப்பர் குறித்த எந்த நினைவும் அந்த ஊரில் இல்லாததுக் கண்டு வியப்படைந்தேன். சோகம்தான் கப்பியது.

**மெய்கண்டார் :**

கடலூர் மாவட்டம், பெண்ணாகடத்தில், அச்சுதக் களப்பாளர் என்னும் பெயர் கொண்ட சைவ வேளாளர் வாழ்ந்தார். இவரின் ஞானாசிரியர் திருத்துறையூர் (பண்ணுருட்டி) சகலாகம பண்டிதர் ஆவார். தனக்கு குழந்தைப் பேறு இல்லையே என்ற கவலையைத் தனது ஞானாசிரியரிடம் பகிர்ந்துகொண்டார். தனது

குருவின் வழிகாட்டுதல் படி தனது மனைவியை அழைத்துக்கொண்டு திருவெண்காடு சென்று அங்கேயே சில காலம் வீடெடுத்துத் தங்கி வெண்காடு ஈசனை வணங்கி வந்தார். திருவெண்காட்டில் அச்சுத களப்பாளரின் துணைவியார் கருவுற்றார். பெண்ணாகடம் திரும்பிய தம்பதியர்தங்கள் சொந்த வீட்டில் சில காலம் வாழ்ந்தனர். பேறுகாலம் நெருங்கியதும் அச்சுதாரின் துணைவியார் தம் தாய்வீடு இருக்கும் திருவெண்ணெய்நல்லூர் சென்றடைந்தார். தாய்வீட்டில் தான் குழந்தை பிறந்தது. அந்தக் குழந்தையே மெய்கண்டார் ஆவார்.

மெய்கண்டாரின் தாய்மாமன் தான் சடையப்ப வள்ளல் என்பதும், மெய்கண்டாரின் தாய்தான் சடையப்பரின் உடன் பிறந்தவள் என்பதும் மறைமலை அடிகளாரின் உறுதியான கருத்தாகும். (03.01.2017, ராசாதுரியன் கட்டுரை)

மெய்கண்டாரின் மாணாக்கர் அருள்நந்தி சிவாச்சாரியார் தனது இருபா இருபஃது என்ற நூலில் மெய்கண்டார் பிறந்த ஊர் திருவெண்ணெய்நல்லூர் என்றே குறிப்பிடுகிறார்.

”கண்ணகன் ஞாலத்துக் கதிரவன் தானென

வெண்ணெய்த் தோன்றிய மெய்கண்ட தேவ”

(இருபா இருபஃது - 2)

“வெண்ணெய்த் தோன்றி நண்ணியுள் புகுந்து”

(இருபா இருபஃது - 6)

மெய்கண்டார் திருக்கோயிலைச் சுற்றிப்பார்த்தேன். மெய்கண்டார் சிறுவயதிலேயே தந்தையாரை இழந்துவிட்டதால் தனது நாலாவது வயதில் தன் தாயாரோடு வெண்ணெய் நல்லூரில்

இருந்த தன் தாய்மாமன் வீட்டில் அடைக்கலமாகி வளர்ந்து, ஞானம் பெற்று சைவ சமயத்தின் இலக்கண நூலாகிய சிவஞான போதத்தைச் சைவ உலகுக்கு அளித்தவர். இத்திருக்கோயில் இவருடைய முக்தி ஸ்தலம் ஆகும்.

இவ்வாண்டு இவரது 800-வது குருபூஜை விழா நடந்தேறியது. அதனையொட்டி இத்திருக்கோயில் புதுப்பிக்கப்பட்டு புதியக் கட்டுமானங்களும் நடைபெற்றுள்ளன. கீழை வாசலில் புதிதாக கோபுரம் எழுப்பப்பட்டு நுழைவாயிலாகவும் பொதுமக்களின் வழிபாட்டுக்காக திறக்கப்பட்டுள்ளது. நல்ல விஸ்தீரமான இடம்.

கம்பரின் காலம் 12-ஆம் நூற்றாண்டு எனக்கொண்டால், சடையப்பர், மெய்கண்டார் இருவரும் சமகாலத்தவரே. சடையப்பர் மரபில்

வந்தவர் மெய்கண்டார் என்பதால் இவ்விருவரும் தொடர்புடையவர்களே.

இத்திருக்கோயிலில் சடையப்பர் குறித்த எந்த அடையாளமும் இன்றில்லை.

**சடையப்ப வள்ளல் வாழ்ந்த வீடு?**

தமிழக தொல்லியற்துறை வந்து பார்வையிட்டுச் சென்றதாக ஒரு இடத்தைச் சுட்டிக்காட்டினார் ஒருவர். அவ்விடத்தின் எதிர்வீட்டில் குடியிருந்தவரைச் சந்தித்தேன்.

தமிழக தொல்லியற்துறைஅவ்விடத்தைப் பார்வையிட்டதை அவரும் ஒப்புக்கொண்டார்.

புதுச்சேரிக் கல்வெட்டு ஒன்றில் திருவெண்ணெய் நல்லூர் சடையப்ப வள்ளல் வாழ்ந்த வீடு “வடக்குத்தெரு முதல் வீடு” என்று சான்று இருப்பதாகவும், அதன்படி அந்த

இடமே இது என்று தொல்லியற்துறையினர் பார்வையிட்டதாகவும், அதற்குரிய இடத்தைக் காண்பித்தார்.

மேற்படி கூடுதல் தகவல்கள் தன்னுடைய தகப்பனாருக்குத் தெரியும் என்று சொல்லி அவரிடம் அழைத்துச் சென்றார். தொல்லியற்துறைச் சுட்டிக்காட்டிய அவ்விடத்தில் அவரது தந்தையார்தான் இப்பொழுது வசிக்கிறார். அவருடைய பெயர் சரவணன் ரெட்டியார், வயது 80. என்னை அழைத்துச் சென்றவர் அவருடைய இளையமகன்.

திரு.சரவணன் ரெட்டியார் அவர்களுடன் ஒரு மணிநேரம் உரையாடினேன். பழுத்த அனுபவம் மிகவும் நிதானத்துடன் உரையாடியது.

“வெண்ணெய் நல்லூர் மேற்கு எல்லையில் சின்னசெவலைப் போகும் வழியில் ஒரு

காளிக்கோயில் இருக்கிறது. கம்பரும் சடையப்பரும் வழிபட்ட தெய்வம் அது”.

“ஊரின் வடக்கே ஏமப்பேர் வழியாக பெண்ணையாற்றைக் கடந்தால் ஒரு சிதிலமடைந்த கருங்கல் மண்டபம் உள்ளது. வள்ளல்தான் சோழர்படைக்கு உணவளிப்பார்”

“சிவன் கோயிலிலிருந்து வெண்ணெய் நல்லூர் சார்ந்த புதுப்பேட்டைப் பகுதிவரை ஒரு சுரங்கப்பாதைச் செல்கிறது. தான் தங்கியிருக்கும் வீட்டையொட்டியே அது செல்கிறது. தொல்லியற்துறை அதனையும் பார்வையிட்டுள்ளது”

“சிவன் கோயில் தென்மேற்கு மூலையில் பொல்லா பிள்ளையார் கோயில் உள்ளது. இக்கோயிலில் அமர்ந்து கொண்டுதான் கம்பர் இராமாயணக் கதையை எழுதினார்”

திரு.சரவண ரெட்டியாரிடமிருந்து நான் தெரிந்து கொண்ட செய்திகள் இவை.

சிவன் கோயில், பெருமாள் கோயில், மெய்கண்டார் திருக்கோயில் இம்மூன்றின் கும்பாபிஷேகம் இவ்வாண்டில் அடுத்தடுத்து நடைபெற்றது. இம்மூன்றும் அருகருகே அமைந்துள்ள கோயில்கள்.

சிவன் கோயிலில் திருப்பணி நடைபெற்றதால் சுரங்கப் பாதையை பார்வையிட முடியவில்லை. காளிக் கோயிலையும், கருங்கல் மண்டபத்தையும் காண முடிந்தது.

திருவெண்ணெய் நல்லூர் வடக்குத் தெருவின் நேர்குத்தாய் மேற்கு புறத்தில் கிழக்கு நோக்கி மெய்கண்டார் திருக்கோயில் உள்ளது. இக்கோயிலின் தென்புறச்சாரியில் முதல் வீடு திரு.சரவண ரெட்டியார் குடியிருப்பது.

பழங்காலத்து திராய்ப் போட்ட பெரிய திண்ணை வீடு. இவ்வீட்டின் தெற்கெல்லை சிவன் கோயிலின் வடக்கு மதில் சுவர். கிழக்கு எல்லை சிவன் கோயிலுக்குப் போகும் வடக்கு முகப்புச் சந்து.

இவ்வீட்டின் கீழ் பகுதியில் கல்யாண மண்டபம் இயங்குகிறது. மேற்கு பகுதியில் பராமரிப்பு வேலைகள் வேகமாக நடைபெற்றுக்கொண்டிருந்தன.

சிவன் கோயிலுக்கு வரும் சிவனடியார்களும், பெருமாள் கோயிலுக்கு வரும் ஸ்ரீஅகோபில மடம் ஜீயரும், மெய்கண்டார் கோயிலுக்கு மாதேஸ்வரப் பூஜைக்கு வரும் ஆதினத் தம்பிரான்களும் இவ்வீட்டில் தான் தங்குவது வழக்கமாம். இவ்விழாக் காலங்களில் அன்னதானமும், அடியார்க்கு விருந்தோம்பலும் நடைபெறும். தங்கள் குடும்பம் தான் முன்னின்று இதனைச்

செய்கிறது என்பதனையும் விளக்கினார்.

கல்யாண மண்டபம் முகப்பில் விவேகானந்தர் சிலை உள்ளது. ஒரு தமிழ்க் கொடைவள்ளல் வாழ்ந்த தமிழ்ப்பூமி, சைவமும் தமிழும் ஒன்றெனச் செழித்தப் பூமி இன்று இந்து மதத்தின் அடையாளமாக உருமாறி வருகின்றது.

திரு. சரவண ரெட்டியார், தான் இருக்கும் இடம்தான் சடையப்பர் வாழ்ந்த இடம் என்பதை என்னிடம் உறுதிச்செய்யவில்லை. தொல்லியற்துறையோ, தமிழக அரசோ சடையப்பர் வாழ்ந்த இடத்தை இன்னும் வெளிப்படுத்தவில்லை. சடையப்ப வள்ளலுக்கு சொந்தமாக இருந்த சுற்றுப்பட்டு கிராமங்கள் யாவும் இன்று தனியார் வசம் உள்ளது. பன்னெடுங்காலமாக தனியார் பட்டாக்கள் மாறிமாறி வந்துள்ளன. இன்றைக்கு நில மதிப்பு கூடிவிட்டதால் யாரும்

முன்வந்து நிலத்தை ஒப்புவிக்க மாட்டார்கள் என்ற ஆதங்கத்தையும் நம்மோடு பகிர்ந்து கொண்டார். சடையப்ப வள்ளல் மீதான மதிப்பையும் பற்றையும் வெளிப்படுத்திடவும் ரெட்டியார் தயங்கியதில்லை.

ஒரு மன்னருக்கு நிகரானச் செல்வ வளம் படைத்த ஒரு தமிழ்க்கொடை வள்ளல் இம்மண்ணில் வாழ்ந்ததற்கான ஒரு அடி நிலம் கூட அடையாளக்குறியாக இல்லையே என்ற சந்தேகம் அடி மனதில் எழுந்தது.

# 11. தமிழ் வள்ளல் சடையப்பர்

இன்று தமிழ்ச் சாதிகள் பலவும் சடையப்பரை தங்களவர் என உரிமைக் கோருகின்றனர். வாலசுந்தரர் இயற்றிய கொங்கு சதகம் "கொங்கு வெள்ளாளக்கவுண்டர் சாத்தந்தைக் குலத்தில் பிறந்த சங்கரன் என்பவரின் புதல்வன் சடையப்பர். இணையார மார்பன் சடையப்பரின் தம்பி" எனப் பேசுகிறது. சாத்தந்தை கோத்திரன், பண்ணைக்குபேந்திரன், தமிழ்ச்சடையன் எனப் பல பெயர்களால் சடையப்பரை கொங்கு மண்டல சதகம் விளிக்கிறது.

ஈரோடு மாவட்டம் தென்முகம் வெள்ளோடு என்ற இடத்திலும், இராசாக்கோவிலிலும் சடையப்பருக்கு சிலைகள் வைக்கப்பட்டுள்ளன. கொங்கு வேளாளக்கவுண்டர்கள் சடையப்பரை

தங்கள் சாதியினராகக் கொண்டாடுகின்றனர். கொங்கு மண்டல சதகம், ஏர் எழுபது ஆகிய நூல்களை அவர்கள் பெரிதும் போற்றுகின்றனர். பொன்னேர் உழும் நிகழ்வில் இன்றும் கொங்கு வேளாளர்கள் ஏர் எழுபது நூலைப் பாடுகின்றனர். தங்கள் இல்லத் திருமணங்களில் கம்பர் பாடிய மங்கல வாழ்த்துப்பா செய்யுட்களை பாடுகின்றனர்.

மூவேந்தர்களும் சடையப்பருக்கு திரிகர்த்தராயன் என்றப் பட்டத்தை அளித்ததாக சோழமண்டல சதகம் பேசுகிறது. சடையப்ப வள்ளல், புதுவை சேதுராயன் வள்ளல் இருவரும் கம்பரை வேண்டி ஏர் எழுபது நூலைப் பாடவைத்தனர். உ.வே.சா அவர்கள் “என் சரிதம்” நூலில் சடையப்பரை நயினார் என்கின்றார். ராயன், சேதுராயன், நயினார் இவை வன்னிய மக்களுக்கு உரிய பட்டங்கள்; ஆகவே, சடையப்பர் தங்களவர் என்பது அவர்கள் வாதம்.

”கி.பி. 3-ஆம் நூற்றாண்டிலேயே மலையாள நாடு பிரிந்து வேறு நாடாகிவிட்டது. என்றாலும் அங்குத் தமிழே கி.பி. 10-ஆம் நூற்றாண்டு வரை நாட்டு மொழியாய் வழங்கிவந்தது. துளு நாடு என்றும் சொண் காணம் என்றும் சங்க இலக்கியங்களில் கூறப்படும் பகுதியும் கி.பி. 4-ஆம் நூற்றாண்டிலேயே பிரிந்து விட்டது. எனினும் சில நூற்றாண்டுகள் அங்கும் தமிழ் மொழியே நாட்டு மொழியாக இருந்து வந்தது

“அக்காலத்தில் சேர சோழ பாண்டிய நாடுகளும் கொங்கு நாடும் துளு நாடும் தமிழ் நாட்டில் அடங்கியிருந்தன. இன்றைய தென் கன்னட மாவட்டமே அக்கால துளு நாடு”

”கி.பி. 2-ஆம் நூற்றாண்டில் கரிகால் சோழன் துளு நாட்டில் இருந்த 48000 வேளாளர் குடிகளை தொண்டை நாட்டில் குடியேற்றினான்.

ஆற்காடுகளாய்க் கிடந்த பகுதிகளைத் திருத்தி அவர்கள் வளமாக்கினர். தொண்டை நாட்டுத் துளுவவேளாளர் என்று அவர்கள் அழைக்கப்பட்டனர். இது போலவே கொங்கு நாட்டிலும் வேளாளர் குடியமர்த்தப்பட்டனர்.

மதுரையை ஆண்ட விசுவநாத நாயக்கருக்கு (1529-1564) தளவாயாக இருந்தவர் அரியநாத முதலியார். காஞ்சிபுரம், மெய்ப்போடு என்னும் சிற்றூரில் பிறந்தவர். இவர் தொண்டை மண்டல துளுவ வேளாளர்களை சோழவந்தான், திருநெல்வேலிப் பகுதிகளில் குடியமர்த்தினார். தமிழ்நாட்டின் பலப்பகுதிகளிலும் பரவிய இவர்கள் தொண்டை மண்டல முதலியார்கள் எனப்படுகின்றனர்.

(பேராசிரியர் அ.கி.பரந்தாமனார் அவர்களின் “வேளாளரும் துளுவவேளாளரும்” என்றக்

கட்டுரையின் சாரம் இது)

கம்பர் தனது இராமாயணம் நூலிலும், ஏர் எழுபது நூலிலும், வேளாண் உழவர் பெருமக்களை போற்றிப்பாடியுள்ளார். சடையப்பர் செல்வ செழிப்பு மிக்க வேளாண் பெருங்குடியினர். பன்னெடுங்காலமாக அவர் முதலியார் சாதியினர் என்று கொண்டாடப்பட்டு வருகின்றார்.

சேக்கிழார் முதலமைச்சராய் பணியாற்றியவர். கம்பர் காலத்தவர். முதலி என்ற சொல் தலைமை அமைச்சரைக் குறிப்பதாய் இருந்துள்ளது. பெரிய புராணத்திலும் இதற்குச் சான்று உண்டு.

இராசராசன் காலத்தில் 1009-ம் ஆண்டு முதலாவதாக மண்டலம் என்ற சொல் பயின்று வருகின்றது. மண்டலத் தலைவர்கள் மண்டல முதலிகள் எனப்பட்டனர்.

பொதுவாக பட்டப்பெயர்கள், தொழிலாகு

பெயர்கள் சாதிப்பெயர்களாக திரிந்து போனது தமிழ்ச் சமுகத்தின் பெரும் துயரம்தான். எதுவாயினும் சடையப்ப வள்ளல் மறுக்கமுடியாத , மறக்கமுடியாத ஒரு தமிழ் வள்ளல் என்பதில் யாருக்கும் ஐயம் இருக்க முடியாது.

# 12. முடிவிலா முரண்

கதிராமங்கலம் வெண்ணெய்நல்லூரில் சடையப்ப வள்ளல் பூர்வீகமாய் வாழ்ந்துள்ளார். கம்பரை இளம் வயதில் எடுத்து வளர்த்து கல்வி கொடுத்து ஆதரித்தது இந்த ஊரில் தான் என்பதற்கு வாய்ப்புகள் அதிகம். கதிராமங்கலம் வெண்ணெய்நல்லூரில் தான் கம்பராமாயணம் இயற்றப்பட்டிருக்க வேண்டும். சடையப்ப வள்ளலின் சமாதியும் இங்குதான் உள்ளது.

சடையப்ப வள்ளல் தனது இறுதிகாலத்தில் மிகவும் வறுமையுற்று வாழ்ந்தார் என்பதற்கும் கம்பரும் தனது இறுதிகாலத்தில் நாடோடி போல அலைந்து பாண்டிய நாட்டில் சில காலம் வாழ்ந்து நாட்டரசன் கோட்டையில் காலமானார் என்பதற்கும் சான்றுகள் உள்ளன.

கம்பர் காலத்து மூன்றாம் குலோத்துங்கன் சிவபக்தன். சைவ - வைணவ முரண்பாடுகள் அதிகம் இருந்த காலம்.

சடையப்பரின் குலதெய்வம் ஆதிமூலப்பெருமாள். வைணவ காப்பியமாகிய கம்பராமாயணத்தை சோழமன்னன் அவையில் அரங்கேற்றாமல் திருவரங்கத்தில் வைணவச் சான்றோர்கள் முன்னிலையில் அரங்கேற்றப்பட்டதற்கு இதுவும் காரணமாக இருந்திருக்கலாம்.

சோழ மன்னனுக்கும் கம்பருக்கும், சோழ மன்னனுக்கும் சடையப்ப வள்ளலுக்கும் இடையே பகைமை முரண்பாடுகள் இருந்ததாக இலக்கியச் சான்றுகள் பல உள்ளன.

அரசு அதிகாரத்தின் தொல்லைகளைத் தாங்க முடியாமல் நடுநாட்டின் திருவெண்ணெய்

நல்லூருக்கு இடைக்காலமாக சடையப்பர் இடம் பெயர்ந்திருக்க வேண்டும். வரலாற்றில் நடுநாடும் பிற்காலச் சோழர்கள் ஆட்சியின் கீழ் இருந்துள்ளது. சடையப்பரின் இன்னொரு தலைமையிடமாக நடுநாட்டின் திருவெண்ணெய்நல்லூர் இயல்பாக அமைந்திருக்க வேண்டும்.

இரண்டு வெண்ணெய் நல்லூருக்கும் உரியவர் சடையப்ப வள்ளல் என்பது பரவிக்கிடக்கும் செய்திகளாகும். கதிராமங்கலம் வெண்ணெய்நல்லூர் தான் சடையப்ப வள்ளலின் பூமி என்பதை உறுதிப்படுத்திட போதுமான சான்றுகள் உள்ளன. ஆனால், விழுப்புரம் திருவெண்ணெய் நல்லூரை உறுதிப்படுத்திட முடியவில்லை .

தமிழறிஞர் உ.வே.சா (1855-1942) அவர்கள் சடையப்ப வள்ளல் வாழ்ந்த பூமி கதிராமங்கலம்

வெண்ணெய் நல்லூர் என்று நேரில் பார்வையிட்டு குறிப்பு எழுதியுள்ளார்.

அகஸ்தியப்ப முதலியார் 1887-ல் தொண்டை மண்டல சதகம் பதிப்புக்கு அணிந்துரை வழங்கியதில் மெய்கண்டார் திருவெண்ணெய் நல்லூரே சடையப்பர் வாழ்ந்த இடம் என்று குறிப்பிடுகிறார்.

மறைமலை அடிகள் (1876-1950) மெய்கண்டாரின் தாய்மாமன் தான் சடையப்ப வள்ளல் என்று உறுதிபடக் கூறுகிறார்.

திருவெண்ணெய்நல்லூர் (விழுப்புரம்) மெய்கண்டார் திருக்கோயிலின் இன்றைய திருச்சிற்றம்பலத் தம்பிரான் அவர்களுடன் உரையாடியபோது சடையப்ப வள்ளல் வாழ்ந்தது இவ்வூர்தான் என்பது மக்களிடம் பரவியுள்ளச் செய்தியாகும். வாழ்ந்த இடம் உள்ளது. ஆனால்,

உறுதிப்படுத்த முடியவில்லை என்கிறார்.

தொல்லியல் துறை அகழாய்வு செய்து தெளிவு படுத்த வேண்டிய அவசியம் உள்ளது.

சடையப்பர் இல்லையேல் ஒரு கம்பர் இல்லை. கம்பர் இல்லையேல் கம்பராமாயணம் இல்லை. கம்பராமாயணம் இல்லையேல் தமிழ்ச்சமூகம் ஒரு பெரும் இதிகாசத்தை இழந்திருக்கும். குறைந்தபட்சம் சடையப்பர் வாழ்ந்த இடங்களை அடையாளப்படுத்த வேண்டும். மணிமண்டபங்கள், நினைவாலயங்கள் அமைத்திட வேண்டும். தமிழுக்கும், தமிழ் மக்களுக்கும் தொண்டாற்றிய அந்த வள்ளலுக்கு நன்றிக்கடன் செலுத்த வேண்டிய தலையாயக் கடமை தமிழக அரசுக்கு உண்டு .

**மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்:**

மின்புத்தகங்களைப் படிப்பதற்கென்றே கையிலேயே வைத்துக் கொள்ளக்கூடிய பல கருவிகள் தற்போது சந்தையில் வந்துவிட்டன. Kindle, Nook, Android Tablets போன்றவை இவற்றில் பெரும்பங்கு வகிக்கின்றன. இத்தகைய கருவிகளின் மதிப்பு தற்போது 4000 முதல் 6000 ரூபாய் வரை குறைந்துள்ளன. எனவே பெரும்பான்மையான மக்கள் தற்போது இதனை வாங்கி வருகின்றனர்.

**ஆங்கிலத்திலுள்ள மின்புத்தகங்கள்:**

ஆங்கிலத்தில் லட்சக்கணக்கான மின்புத்தகங்கள் தற்போது கிடைக்கப் பெறுகின்றன. அவை PDF, EPUB, MOBI, AZW3.

போன்ற வடிவங்களில் இருப்பதால், அவற்றை மேற்கூறிய கருவிகளைக் கொண்டு நாம் படித்துவிடலாம்.

**தமிழிலுள்ள மின்புத்தகங்கள்:**

தமிழில் சமீபத்திய புத்தகங்களெல்லாம் நமக்கு மின்புத்தகங்களாக கிடைக்கப்பெறுவதில்லை. ProjectMadurai.com எனும் குழு தமிழில் மின்புத்தகங்களை வெளியிடுவதற்கான ஓர் உன்னத சேவையில் ஈடுபட்டுள்ளது. இந்தக் குழு இதுவரை வழங்கியுள்ள தமிழ் மின்புத்தகங்கள் அனைத்தும் PublicDomain-ல் உள்ளன. ஆனால் இவை மிகவும் பழைய புத்தகங்கள்.

சமீபத்திய புத்தகங்கள் ஏதும் இங்கு கிடைக்கப்பெறுவதில்லை.

**சமீபத்திய புத்தகங்களை தமிழில் பெறுவது எப்படி?**

அமேசான் கிண்டில் கருவியில் தமிழ் ஆதரவு தந்த பிறகு, தமிழ் மின்னூல்கள் அங்கே விற்பனைக்குக் கிடைக்கின்றன. ஆனால் அவற்றை நாம் பதிவிறக்க இயலாது. வேறு யாருக்கும் பகிர இயலாது.

சமீபகாலமாக பல்வேறு எழுத்தாளர்களும், பதிவர்களும், சமீபத்திய நிகழ்வுகளைப் பற்றிய விவரங்களைத் தமிழில் எழுதத் தொடங்கியுள்ளனர். அவை இலக்கியம், விளையாட்டு, கலாச்சாரம், உணவு, சினிமா, அரசியல், புகைப்படக்கலை, வணிகம் மற்றும் தகவல் தொழில்நுட்பம் போன்ற பல்வேறு தலைப்புகளின் கீழ் அமைகின்றன.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகச் சேர்த்து தமிழ் மின்புத்தகங்களை உருவாக்க உள்ளோம்.

அவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள்

Creative Commons எனும் உரிமத்தின் கீழ் வெளியிடப்படும். இவ்வாறு வெளியிடுவதன் மூலம் அந்தப் புத்தகத்தை எழுதிய மூல ஆசிரியருக்கான உரிமைகள் சட்டரீதியாகப் பாதுகாக்கப்படுகின்றன. அதே நேரத்தில் அந்த மின்புத்தகங்களை யார் வேண்டுமானாலும், யாருக்கு வேண்டுமானாலும், இலவசமாக வழங்கலாம்.

எனவே தமிழ் படிக்கும் வாசகர்கள் ஆயிரக்கணக்கில் சமீபத்திய தமிழ் மின்புத்தகங்களை இலவசமாகவே பெற்றுக் கொள்ள முடியும்.

**தமிழிலிருக்கும் எந்த வலைப்பதிவிலிருந்து வேண்டுமானாலும் பதிவுகளை எடுக்கலாமா?**

கூடாது.

ஒவ்வொரு வலைப்பதிவும் அதற்கென்றே

ஒருசில அனுமதிகளைப் பெற்றிருக்கும். ஒரு வலைப்பதிவின் ஆசிரியர் அவரது பதிப்புகளை "யார் வேண்டுமானாலும் பயன்படுத்தலாம்" என்று குறிப்பிட்டிருந்தால் மட்டுமே அதனை நாம் பயன்படுத்த முடியும்.

அதாவது "Creative Commons" எனும் உரிமத்தின் கீழ் வரும் பதிப்புகளை மட்டுமே நாம் பயன்படுத்த முடியும்.

அப்படி இல்லாமல் "All Rights Reserved" எனும் உரிமத்தின் கீழ் இருக்கும் பதிப்புகளை நம்மால் பயன்படுத்த முடியாது.

வேண்டுமானால் "All Rights Reserved" என்று விளங்கும் வலைப்பதிவுகளைக் கொண்டிருக்கும் ஆசிரியருக்கு அவரது பதிப்புகளை "Creative Commons" உரிமத்தின் கீழ் வெளியிடக்கோரி நாம் நமது வேண்டுகோளைத் தெரிவிக்கலாம். மேலும்

அவரது படைப்புகள் அனைத்தும் அவருடைய பெயரின் கீழே தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் நாம் அளிக்க வேண்டும்.

பொதுவாக புதுப்புது பதிவுகளை உருவாக்குவோருக்கு அவர்களது பதிவுகள் நிறைய வாசகர்களைச் சென்றடைய வேண்டும் என்ற எண்ணம் இருக்கும். நாம் அவர்களது படைப்புகளை எடுத்து இலவச மின்புத்தகங்களாக வழங்குவதற்கு நமக்கு அவர்கள் அனுமதியளித்தால், உண்மையாகவே அவர்களது படைப்புகள் பெரும்பான்மையான மக்களைச் சென்றடையும். வாசகர்களுக்கும் நிறைய புத்தகங்கள் படிப்பதற்குக் கிடைக்கும்

வாசகர்கள் ஆசிரியர்களின் வலைப்பதிவு முகவரிகளில் கூட அவர்களுடைய படைப்புகளை தேடிக் கண்டுபிடித்து படிக்கலாம். ஆனால் நாங்கள்

வாசகர்களின் சிரமத்தைக் குறைக்கும் வண்ணம் ஆசிரியர்களின் சிதறிய வலைப்பதிவுகளை ஒன்றாக இணைத்து ஒரு முழு மின்புத்தகங்களாக உருவாக்கும் வேலையைச் செய்கிறோம். மேலும் அவ்வாறு உருவாக்கப்பட்ட புத்தகங்களை “மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்”-க்கு ஏற்ற வண்ணம் வடிவமைக்கும் வேலையையும் செய்கிறோம்.

**FREETAMILEBOOKS.COM**

இந்த வலைத்தளத்தில்தான் பின்வரும் வடிவமைப்பில் மின்புத்தகங்கள் காணப்படும்.

PDF for desktop, PDF for 6” devices, EPUB, AZW3, ODT

இந்த வலைதளத்திலிருந்து யார் வேண்டுமானாலும் மின்புத்தகங்களை இலவசமாகப் பதிவிறக்கம்(download) செய்து

கொள்ளலாம்.

அவ்வாறு பதிவிறக்கம்(download) செய்யப்பட்ட புத்தகங்களை யாருக்கு வேண்டுமானாலும் இலவசமாக வழங்கலாம்.

இதில் நீங்கள் பங்களிக்க விரும்புகிறீர்களா?

நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் தமிழில் எழுதப்பட்டிருக்கும் வலைப்பதிவுகளிலிருந்து பதிவுகளை
எடுத்து, அவற்றை LibreOffice/MS Office போன்ற wordprocessor-ல் போட்டு ஓர் எளிய மின்புத்தகமாக மாற்றி எங்களுக்கு அனுப்பவும்.

அவ்வளவுதான்!

**மேலும் சில பங்களிப்புகள் பின்வருமாறு:**

1. ஒருசில பதிவர்கள்/எழுத்தாளர்களுக்கு அவர்களது படைப்புகளை “Creative Com-

mons” உரிமத்தின்கீழ் வெளியிடக்கோரி மின்னஞ்சல் அனுப்புதல்

2. தன்னார்வலர்களால் அனுப்பப்பட்ட மின்புத்தகங்களின் உரிமைகளையும் தரத்தையும் பரிசோதித்தல்
3. சோதனைகள் முடிந்து அனுமதி வழங்கப்பட்ட தரமான மின்புத்தகங்களை நமது வலைதளத்தில் பதிவேற்றம் செய்தல்

விருப்பமுள்ளவர்கள் freetamilebook-steam@gmail.com எனும் முகவரிக்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

**இந்தத் திட்டத்தின் மூலம் பணம் சம்பாதிப்பவர்கள் யார்?**

யாருமில்லை.

இந்த வலைத்தளம் முழுக்க முழுக்க

தன்னார்வலர்களால் செயல்படுகின்ற ஒரு வலைத்தளம் ஆகும். இதன் ஒரே நோக்கம் என்னவெனில் தமிழில் நிறைய மின்புத்தகங்களை உருவாக்குவதும், அவற்றை இலவசமாக பயனர்களுக்கு வழங்குவதுமே ஆகும்.

மேலும் இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள், ebook reader ஏற்றுக்கொள்ளும் வடிவமைப்பில் அமையும்.

**இத்திட்டத்தால் பதிப்புகளை எழுதிக்கொடுக்கும் ஆசிரியர்/பதிவருக்கு என்ன லாபம்?**

ஆசிரியர்/பதிவர்கள் இத்திட்டத்தின் மூலம் எந்தவிதமான தொகையும் பெறப்போவதில்லை. ஏனெனில், அவர்கள் புதிதாக இதற்கென்று எந்தஒரு பதிவையும் எழுதித்தரப்போவதில்லை.

ஏற்கனவே அவர்கள் எழுதி வெளியிட்டிருக்கும்

பதிவுகளை எடுத்துத்தான் நாம் மின்புத்தகமாக வெளியிடப்போகிறோம்.

அதாவது அவரவர்களின் வலைதளத்தில் இந்தப் பதிவுகள் அனைத்தும் இலவசமாகவே கிடைக்கப்பெற்றாலும், அவற்றையெல்லாம் ஒன்றாகத் தொகுத்து ebook reader போன்ற கருவிகளில் படிக்கும் விதத்தில் மாற்றித் தரும் வேலையை இந்தத் திட்டம் செய்கிறது.

தற்போது மக்கள் பெரிய அளவில் tablets மற்றும் ebook readers போன்ற கருவிகளை நாடிச் செல்வதால் அவர்களை நெருங்குவதற்கு இது ஒரு நல்ல வாய்ப்பாக அமையும்.

**நகல் எடுப்பதை அனுமதிக்கும் வலைதளங்கள் ஏதேனும் தமிழில் உள்ளதா?**

உள்ளது.

பின்வரும் தமிழில் உள்ள வலைதளங்கள் நகல் எடுப்பதினை அனுமதிக்கின்றன.

1. http://www.vinavu.com
2. http://www.badriseshadri.in
3. http://maattru.com
4. http://kaniyam.com
5. http://blog.ravidreams.net

**எவ்வாறு ஒர் எழுத்தாளரிடம் CREATIVE COMMONS உரிமத்தின் கீழ் அவரது படைப்புகளை வெளியிடுமாறு கூறுவது?**

இதற்கு பின்வருமாறு ஒரு மின்னஞ்சலை அனுப்ப வேண்டும்.

<துவக்கம்>

உங்களது வலைத்தளம் அருமை

[வலைதளத்தின் பெயர்].

தற்போது படிப்பதற்கு உபயோகப்படும் கருவிகளாக Mobiles மற்றும் பல்வேறு கையிருப்புக் கருவிகளின் எண்ணிக்கை அதிகரித்து வந்துள்ளது.

இந்நிலையில் நாங்கள் http://www.FreeTamilEbooks.com எனும் வலைதளத்தில், பல்வேறு தமிழ் மின்புத்தகங்களை வெவ்வேறு துறைகளின் கீழ் சேகரிப்பதற்கான ஒரு புதிய திட்டத்தில் ஈடுபட்டுள்ளோம்.

இங்கு சேகரிக்கப்படும் மின்புத்தகங்கள் பல்வேறு கணிணிக் கருவிகளான Desktop,ebook readers like kindl, nook, mobiles, tablets with android, iOS போன்றவற்றில் படிக்கும் வண்ணம் அமையும். அதாவது இத்தகைய கருவிகள் support செய்யும் odt, pdf, ebub, azw போன்ற வடிவமைப்பில் புத்தகங்கள்

அமையும்.

இதற்காக நாங்கள் உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பெற விரும்புகிறோம். இதன் மூலம் உங்களது பதிவுகள் உலகளவில் இருக்கும் வாசகர்களின் கருவிகளை நேரடியாகச் சென்றடையும்.

எனவே உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பிரதியெடுப்பதற்கும் அவற்றை மின்புத்தகங்களாக மாற்றுவதற்கும் உங்களது அனுமதியை வேண்டுகிறோம்.

இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்களில் கண்டிப்பாக ஆசிரியராக உங்களின் பெயரும் மற்றும் உங்களது வலைதள முகவரியும் இடம்பெறும். மேலும் இவை “Creative Commons” உரிமத்தின் கீழ் மட்டும்தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் அளிக்கிறோம்.

http://creativecommons.org/licenses/

நீங்கள் எங்களை பின்வரும் முகவரிகளில் தொடர்பு கொள்ளலாம்.

e-mail : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM

FB : https://www.facebook.com/FreeTamilEbooks

G plus: https://plus.google.com/communities/108817760492177970948

நன்றி.

</முடிவு>

மேற்கூறியவாறு ஒரு மின்னஞ்சலை உங்களுக்குத் தெரிந்த அனைத்து எழுத்தாளர்களுக்கும் அனுப்பி அவர்களிடமிருந்து அனுமதியைப் பெறுங்கள்.

முடிந்தால் அவர்களையும் “Creative Commons License”-ஐ அவர்களுடைய வலைதளத்தில் பயன்படுத்தச் சொல்லுங்கள்.

கடைசியாக அவர்கள் உங்களுக்கு அனுமதி அளித்து அனுப்பியிருக்கும் மின்னஞ்சலைFREE-TAMILEBOOKSTEAM@GMAIL.COM எனும் முகவரிக்கு அனுப்பி வையுங்கள்.

**ஓர் எழுத்தாளர் உங்களது உங்களது வேண்டுகோளை மறுக்கும் பட்சத்தில் என்ன செய்வது?**

அவர்களையும் அவர்களது படைப்புகளையும் அப்படியே விட்டுவிட வேண்டும்.

ஒருசிலருக்கு அவர்களுடைய சொந்த முயற்சியில் மின்புத்தகம் தயாரிக்கும் எண்ணம்கூட இருக்கும். ஆகவே அவர்களை நாம் மீண்டும் மீண்டும் தொந்தரவு செய்யக் கூடாது.

அவர்களை அப்படியே விட்டுவிட்டு அடுத்தடுத்த எழுத்தாளர்களை நோக்கி நமது முயற்சியைத் தொடர வேண்டும்.

## மின்புத்தகங்கள் எவ்வாறு அமைய வேண்டும்?

ஒவ்வொருவரது வலைத்தளத்திலும் குறைந்தபட்சம் நூற்றுக்கணக்கில் பதிவுகள் காணப்படும். அவை வகைப்படுத்தப்பட்டோ அல்லது வகைப்படுத்தப் படாமலோ இருக்கும்.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகத் திரட்டி ஒரு பொதுவான தலைப்பின்கீழ் வகைப்படுத்தி மின்புத்தகங்களாகத் தயாரிக்கலாம். அவ்வாறு வகைப்படுத்தப்படும் மின்புத்தகங்களை பகுதி-I பகுதி-II என்றும் கூட தனித்தனியே பிரித்துக் கொடுக்கலாம்.

**தவிர்க்க வேண்டியவைகள் யாவை?**

இனம், பாலியல் மற்றும் வன்முறை போன்றவற்றைத் தூண்டும் வகையான பதிவுகள் தவிர்க்கப்பட வேண்டும்.

**எங்களைத் தொடர்பு கொள்வது எப்படி?**

நீங்கள் பின்வரும் முகவரிகளில் எங்களைத் தொடர்பு கொள்ளலாம்.

- EMAIL : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM
- Facebook: https://www.facebook.com/FreeTamilEbooks
- Google Plus: https://plus.google.com/communities/108817760492177970948

**இத்திட்டத்தில் ஈடுபட்டுள்ளவர்கள் யார்?**

குழு – http://freetamilebooks.com/meet-the-team/

# கணியம் அறக்கட்டளை

**தொலை நோக்கு – Vision**

தமிழ் மொழி மற்றும் இனக்குழுக்கள் சார்ந்த மெய்நிகர்வளங்கள், கருவிகள் மற்றும் அறிவுத்தொகுதிகள், அனைவருக்கும் கட்டற்ற அணுக்கத்தில் கிடைக்கும் சூழல்

**பணி இலக்கு – Mission**

அறிவியல் மற்றும் சமூகப் பொருளாதார வளர்ச்சிக்கு ஒப்ப, தமிழ் மொழியின் பயன்பாடு வளர்வதை உறுதிப்படுத்துவதும், அனைத்து அறிவுத் தொகுதிகளும், வளங்களும் கட்டற்ற அணுக்கத்தில் அனைவருக்கும் கிடைக்கச்செய்தலும்.

## தற்போதைய செயல்கள்

- கணியம் மின்னிதழ் – http://kaniyam.com/
- கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இலவச தமிழ் மின்னூல்கள் – http://FreeTamilEbooks.com

## கட்டற்ற மென்பொருட்கள்

- உரை ஒலி மாற்றி – Text to Speech

-  எழுத்துணரி – Optical Character Recognition
-  விக்கிமூலத்துக்கான எழுத்துணரி
-  மின்னூல்கள் கிண்டில் கருவிக்கு அனுப்புதல் – Send2Kindle
-  விக்கிப்பீடியாவிற்கான சிறு கருவிகள்
-  மின்னூல்கள் உருவாக்கும் கருவி
-  உரை ஒலி மாற்றி – இணைய செயலி
-  சங்க இலக்கியம் – ஆன்டிராய்டு செயலி
-  FreeTamilEbooks – ஆன்டிராய்டு செயலி
-  FreeTamilEbooks – ஐஒஎஸ் செயலி
-  WikisourceEbooksReportஇந்திய மொழிகளுக்ககான விக்கிமூலம் மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்

- FreeTamilEbooks.com – Download counter மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்

## அடுத்த திட்டங்கள்/மென்பொருட்கள்

- விக்கி மூலத்தில் உள்ள மின்னூல்களை பகுதிநேர/முழு நேரப் பணியாளர்கள் மூலம் விரைந்து பிழை திருத்துதல்
- முழு நேர நிரலரை பணியமர்த்தி பல்வேறு கட்டற்ற மென்பொருட்கள் உருவாக்குதல்
- தமிழ் NLP க்கான பயிற்சிப் பட்டறைகள் நடத்துதல்
- கணியம் வாசகர் வட்டம் உருவாக்குதல்
- கட்டற்ற மென்பொருட்கள், கிரியேட்டிவ்

காமன்சு உரிமையில் வளங்களை உருவாக்குபவர்களைக் கண்டறிந்து ஊக்குவித்தல்

- கணியம் இதழில் அதிக பங்களிப்பாளர்களை உருவாக்குதல், பயிற்சி அளித்தல்
- மின்னூலாக்கத்துக்கு ஒரு இணையதள செயலி
- எழுத்துணரிக்கு ஒரு இணையதள செயலி
- தமிழ் ஒலியோடைகள் உருவாக்கி வெளியிடுதல்
- http://OpenStreetMap.org ல் உள்ள இடம், தெரு, ஊர் பெயர்களை தமிழாக்கம் செய்தல்
- தமிழ்நாடு முழுவதையும் http://OpenStreetMap.org ல் வரைதல்
- குழந்தைக் கதைகளை ஒலி வடிவில்

வழங்குதல்

-  http://Ta.wiktionary.org ஐ ஒழுங்குபடுத்தி API க்கு தோதாக மாற்றுதல்
-  http://Ta.wiktionary.org க்காக ஒலிப்பதிவு செய்யும் செயலி உருவாக்குதல்
-  தமிழ் எழுத்துப் பிழைத்திருத்தி உருவாக்குதல்
-  தமிழ் வேர்ச்சொல் காணும் கருவி உருவாக்குதல்
-  எல்லா http://FreeTamilEbooks.com மின்னூல்களையும் Google Play Books, GoodReads.com ல் ஏற்றுதல்
-  தமிழ் தட்டச்சு கற்க இணைய செயலி உருவாக்குதல்
-  தமிழ் எழுதவும் படிக்கவும் கற்ற இணைய செயலி உருவாக்குதல் ( aamozish.com/Course_-

preface போல)

மேற்கண்ட திட்டங்கள், மென்பொருட்களை உருவாக்கி செயல்படுத்த உங்கள் அனைவரின் ஆதரவும் தேவை. உங்களால் எவ்வாறேனும் பங்களிக்க இயலும் எனில் உங்கள் விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

### வெளிப்படைத்தன்மை

கணியம் அறக்கட்டளையின் செயல்கள், திட்டங்கள், மென்பொருட்கள் யாவும் அனைவருக்கும் பொதுவானதாகவும், 100% வெளிப்படைத்தன்மையுடனும் இருக்கும்.இந்த இணைப்பில் செயல்களையும், இந்த இணைப்பில்

மாத அறிக்கை, வரவு செலவு விவரங்களுடனும் காணலாம்.

கணியம் அறக்கட்டளையில் உருவாக்கப்படும் மென்பொருட்கள் யாவும் கட்டற்ற மென்பொருட்களாக மூல நிரலுடன், GNU GPL, Apache, BSD, MIT, Mozilla ஆகிய உரிமைகளில் ஒன்றாக வெளியிடப்படும். உருவாக்கப்படும் பிற வளங்கள், புகைப்படங்கள், ஒலிக்கோப்புகள், காணொளிகள், மின்னூல்கள், கட்டுரைகள் யாவும் யாவரும் பகிரும், பயன்படுத்தும் வகையில் கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இருக்கும்.

# நன்கொடை

உங்கள் நன்கொடைகள் தமிழுக்கான கட்டற்ற வளங்களை உருவாக்கும் செயல்களை சிறந்த வகையில் விரைந்து செய்ய ஊக்குவிக்கும்.

பின்வரும் வங்கிக் கணக்கில் உங்கள் நன்கொடைகளை அனுப்பி, உடனே விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

**Kaniyam Foundation**

**Account Number : 606 1010 100 502 79**

**Union Bank Of India**

**West Tambaram, Chennai**

**IFSC – UBIN0560618**

குறிப்பு: சில UPI செயலிகளில் இந்த QR Code வேலை செய்யாமல் போகலாம். அச்சமயம் மேலே உள்ள வங்கிக் கணக்கு எண், IFSC code ஐ பயன்படுத்தவும்.

Note: Sometimes UPI does not work properly, in that case kindly use Account number and IFSC code for internet banking.